துணரலாம். இது ஸ்ரீவித்யா ஸூத்ரம், உபதேசமாலா, விஜயம் இந்த க்ரந்தங்களில் இன்னும் விஸ்தாரமாக உளது. வேததந்த்ர ஆகமங்களால் உபதேசிக்கப்படும் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் இவ்வாறாகும். இதுதான் காயத்திரியாலுபதேசிக்கப்படுவது.''

காயத்ரி ப்ருஹ்மத்தின் ஸ்வரூபத்தை விளக்குகிறது. த்ரிபதா காயத்ரி வேதங்களில் வெளிப்படையாக உபதேசிக்கப்பட்டுள்ள வித்யை. துரீய காயத்திரி சற்று மறைமுகமாக உபதேசிக்கப்பட்டுள்ளது. வேதங்களின் ஸாரமாக காயத்திரி கருதப்படுகிறது. இதுவே ப்ருஹ்ம வித்யை. அதுகொண்டே காயத்ரி உபதேசம் ப்ருஹ்மோபதேசம் என்று வழங்கப்படுகிறது. ப்ருஹ்ம என்று வேதங்களுக்குப் பெயர் அதனால் ப்ருஹ்மோபதேசம் என்று கூறுபவரும் உண்டு. ஆயினும் வேதங்கள் வெளிப்படையாக ப்ருஹ்மத்தின் ஸ்வரூபத்தை விளக்குவதால் அவைக்கு ப்ருஹ்ம என்றே பெயர். அது கொண்டு வேதாத்யயனமும் அவற்றிற்கு ஸாரமான காயத்ரி உபதேசமும் ப்ருஹ்மஸ்வரூபத்தை ஸாதனை மூலம் உணருவதற்காகவே ஏற்பட்டவை என்று பொருள்.

உபநயன காலத்தில் ப்ரஹ்மோபதேசம் என்ற ப்ரஹ்ம வித்யையில் தீக்ஷை பெற்று வேத சாஸ்த்ரங்களையுணர்ந்து "சக்தி ஞானமின்றி மோக்ஷம் அடைவதென்பது பரிஹஸிக்கத்தக்க விஷயம் (शक्तिज्ञानं विना मोक्ष: तथा हास्याय कल्पते) என்று பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் கூறியுள்ளபடி சக்தி ஞானத்திற்காக மஹாவித்யைகளில் தீக்ஷை பெற்று வேத தந்த்ர ஆகமங்களில் விதிக்கப்பட்ட சிதக்னிஹவனம் முதலிய அனுஷ்டானங்களை முறைப்படி செய்து பூர்ணாபிஷேகம் செய்துவைக்கும் "ஒரு குருவை மட்டுமே" தெய்வ பாவத்துடன் பூர்ணமாக பூஜித்துப் பின்பற்றும் மனப்பக்குவமடைந்தவர்களுக்கு ஸ்ரீவித்யையை உபதேசிக்குமாறு வேதம் "க்ரியாவந்த: ச்ரோத்ரியா: ப்ருஹ்மநிஷ்டா: ஸ்வயம் ஜுஹ்வந்த: ஏகர்ஷி ச்ரத்தயந்த: தேஷாமே வைதாம் ஸ்ரீ வித்யாம் வதேத" என்று விதிக்கிறது.

ஆகையினால் அத அத: என்ற சொற்களுக்கு தர்ம ஜிக்ஞாஸையையும் ப்ருஹ்ம ஜிக்ஞாஸையையும் வேத சாஸ்த்திரங்களையுணர்வதன் மூலம் போக்கிக்கொண்டு ப்ரஹ்மவித்யையை உபாஸித்து ப்ரஹ்ம ஸ்வரூப ஸாக்ஷாத்காரத்தைப் பெற்றபிறகு பிறப்பின் பயனான ஆனந்த ஸ்வரூபானுபவத்தைப் பெற ஸ்ரீவித்யோபாஸனையை அனுஷ்டிக்க விரும்பும் ஸாதகர்களுக்கு அதற்கு இன்றியமையாத தீக்ஷை விளக்கப்படுகிறது. அத அத: என்ற சொற்களுக்கு ப்ரஹ்ம வித்யோபஸனைக்குப் பிறகு என்று பொருள்.

(தொடரும்)



**வினா:** குங்குமம் தேவியின் அர்ச்சனைக்கு உபயோகிக்கப்படுகிறது. அர்ச்சனை செய்யப்பட்ட குங்குமம் நெற்றியில் தரிக்கப்படுகிறது. சில இடங்களில் சிந்தூரமும் உபயோகிக்கப்படுகிறது. இதற்கு ஏதாவது உட்கருத்து உண்டா?

(K. S. V.)

**விடை:** தேவதைகளை மலர்கொண்டு அர்சிக்கிறோம். மலர் ஸ்ருஷ்டி சக்தியின் பிரதிநிதி. ப்ரஸவ என்று மலருக்கு வடமொழியில் ஒரு பெயரும் உண்டு. குங்கும கேஸரம் என்பது குங்குமப்பூ. இதனால் முக்கியமாக தேவிக்கு அர்ச்சனை செய்து வந்திருக்கின்றனர். இதன் நிறம் சிகப்பு. சிவசக்தி தத்துவங்களில் சிவாம்சத்தை வெண்மையாகவும் சக்தியம்சத்தை சிகப்பாகவும் கூறுவர். ஆகையினால் வெண்மையான விபூதி சிவாம்சத்தையும் செம்மையான குங்குமப்பூ சக்தியம்சத்தையும் குறிக்கும். அவ்விதமே வெண்மையான திருமண் சிவ தத்துவத்தையும் (விஷ்ணு அம்சத்தையும்) செம்மை அல்லது மஞ்சள் நிறமான ஸ்ரீ சூர்ணம் சக்தியம்சத்தை (லக்ஷ்மியின் அம்சத்தை) குறிக்கும். அதை குறிப்பிடும் வகையில் அர்ச்சனை செய்த அவற்றை ப்ரஸாதமாக நெற்றியில் தரித்து வந்திருக்கிறார்கள். தேவியை வழிபடுபவர் முக்கியமாக குங்குமப் பூவினால் திலகம் தரித்து வந்திருக்கிறார்கள். ஸிந்தூரத்தின் நிறமும் சிகப்பு. பாதரஸம், கந்தகம் இவற்றை சேர்த்து எரித்து எடுப்பதே ஸிந்தூரம். பாதரஸம் சிவாம்சத்தையும் கந்தகம் சக்தியம்சத்தையும் அதன் சேர்க்கையால் வந்த ஸிந்தூரம் சிவசக்தி ஸாமரஸ்யத்தையும் குறிக்கும். அது கொண்டு ஸிந்தூரத்தை சிலர் உபயோகிக்கத் தொடங்கினர். குங்குமப்பூ அதிக விலையுள்ளதால் மங்களகரமான மஞ்சள் நிறம் கொண்ட மஞ்சளுடன் வெண்மை நிறம் கொண்ட படிகாரம் கலந்து அதனால் கிடைத்த செந்நிறமான குங்குமத்தை ஸிந்தூரத்திற்கும் குங்குமப்பூவிற்கும் பதிலாக உபயோகிக்கலாயினர். ரஸம் கந்தகம் இவற்றை எரித்து எடுக்கும் ஸிந்தூரமும் விலையுள்ளது கொண்டு ஈய சிந்தூரத்தை ஸிந்தூரத்திற்கு பதில் தற்போது வழக்கத்தில் கொண்டு வந்துள்ளனர். குங்குமப்பூவினால் அர்ச்சனையும், அதைக் குழைத்து திலகம் தரிப்பதும் ரஸஸிந்தூரத்தை உபயோகிப்பதும் சிறந்தது. அது முடியாவிடில் மஞ்சள் குங்குமம் அதுவும் முடியாதவர்கள் தற்போது ஸிந்தூரம் என்று கூறப்படும் ஈயச் சிந்தூரம் உபயோகிக்கலாம். ஈயச் சிந்தூரம் சிலருக்கு தோல் சம்பந்தமான சில ரோகங்களை உண்டு பண்ணக்கூடும் என்பதையும் நினைவில்கொள்வது நல்லது. குங்கும அல்லது ஸிந்தூர திலகத்தை பிந்துவாகவும் பிந்துவை உறைந்த சக்தியாகவும் பாவனை செய்து அதை தரிப்பதன் மூலம் தன் ஆக்ஞா ஸ்தானத்தில் சக்தியின் விளக்கத்தை உணர முயல்வதும் முக்கியமானது. அர்ச்சனை செய்யும் பொழுதும் அவற்றின் உட்பொருளை மனதிற் கொள்ளவேண்டும். உலகத்தையே சிவசக்தி மயமாக நோக்க பயிலுவதே தந்த்ர ஆகம உபாஸனையின் இலட்சியம். விரிக்கில் பெருகும்.

(S. V. R)

மூன்று விதமாக விளங்கினாள். எவள் புருஷர்களை; மயங்கச்செய்பவளாகி "பிறப்பு—இறப்பு"ள்ள உடற்புத்தொடரை எடுக்கச்செய்து சுழலச் செய்கிறாளோ அவளே "மாயை". (22) எவள் புருஷர்களின் அசைவுகளுக்கெல்லாம் ஆதிசக்தியாக விளங்குகிறாளோ! (எந்த சக்தியின்றி அணுவும் அசைய இயலாதோ!) அவளே "பரமை" (परमा) என்ற பராசக்தியாகிறாள். எவள் புருஷர்களுக்கு உண்மை, பிரம்மஞானமாக அமைந்து "பிறப்பு-இறப்பு உடல் சுழலிலிருந்து விடுவிப்பவளாகிறாளோ அவளே "வித்யை" (विद्या) என்பவள். (23)

மஹர்ஷே! அப்பொழுது மாயையால் (கட்டுப்பட்ட) ஆக்கப்பட்ட "ஜீவாத்மா"க்கள் அந்த மாயையை விரும்பி அடைந்தனர். ஹே முனிவரில் சிறந்தவரே! அப்பொழுது அந்த ஜீவபுருஷர்கள் அந்த மாயா சக்தியால் மயங்கியவர்களாகி அந்த மாயயான பராசக்தியை அடைந்து பூதங்களின் குணங்களான ஒலி, ஒளி, மணம், சுவை, ஸ்பரிச உணர்வு ஆகிய விஷயங்களில் விருப்பமுள்ளவர்களாகிவிட்டனர் (ஈடுபட்டு விட்டனர்.) (24½)

அந்த மூன்றுவதான "பராவித்யா" சக்தியானவள் தானாகவே [illegible], ஸாவித்ரி, லக்ஷ்மி, ஸரஸ்வதி' என்று இவ்வாறு [illegible] சக்திகளாக விரிந்து விளங்கினாள். அகிலங்களையெல்லாம் தாங்கும் அந்த எங்கும் நிறைந்த மூலப்ரக்ருதி, நேராகவந்து, பிரம்ம, விஷ்ணு, மஹேசர்களை தனித்தனியே ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய ஸ்ருஷ்டி காரியத்தில் அமர்த்தி, இவ்வாறு கூறினாள். (26½)

நீங்கள் முன்பு ஸ்ருஷ்டி கார்யங்களுக்காகவே என்னால் என் விருப்பப்படி உண்டாக்கப்பட்டீர்கள். (27) ஆகவே பேரன்பு கொண்டவர்களே! என் விருப்பம் நிறைவேறச் செய்யுங்கள். பிரமன் சராசர ப்ராணிகளை உண்டு செய்யட்டும் (28). மிக்க தோள்வலியுள்ளவரும், மகாபலசாலியுமான மஹாவிஷ்ணுவே உலகிற்கு குழப்பம் செய்பவர்களை ஒடுக்கி, மிகவும் கட்டுப்பாடுடன் பிரமனால் படைக்கப்பட்ட எண்ணிலடங்காத விசித்ரமான பலவித ப்ராணிகளை காத்து ரக்ஷிக்கட்டும். (29½). ரீதியில் தமோ குணம் மேலோங்கிய சிவன், எனக்கு அழிவில் விருப்பம் ஏற்படும்பொழுது இவ்வுலகனைத்தையும் அழித்துவிடப்போகிறார் (30½).

மும்புருஷர்களான உங்களால், (ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய) படைப்பு முதலிய காரியங்களில் ஒருவருக்கொருவர், கட்டாயம் உதவியும் செய்துகொள்ளப்படவேண்டும் (31½). நானும என்விருப்பப்படி ஸாவித்ரி, கங்கை, துர்கை, லக்ஷ்மி, ஸரஸ்வதி என்று ஐந்து விதமாகி உங்களது காதல் மனைவிகளாக விளையாடப் போகிறேன். அவ்வாறே சம்புவான பரமேச்வரனும் நானும், எல்லா உயிரினங்களிலும் ஸ்த்ரீகளாக விளங்கி, என் விருப்பம்போல் பலவித உயிரினங்களை ஈன்றெடுக்கப் போகிறேன். (33½) ஹே ப்ரம்மதேவா! நீர் என் உத்திரவுபடி மானுஷ படைப்பை செய்வீராக. இல்லாவிடில் இப்பொழுதுக்கு இந்த படைப்பு



விரிவடையப்போவதில்லை. இவ்வாறு பராத்பரையான அந்த மஹாவித்யயான மூலப்ரக்ருதி பிரம்ம விஷ்ணு சிவன்களிடம் கூறி, பிரம்மாதிகளான அந்த மும்மூர்த்திகள் பார்த்துக்கொண்டு இருக்கயிலேயே தானாகவே மறைந்து விட்டாள். பிரம்மதேவர் அந்த பராத்பரயான மூலப்ரக்ருதியின் வாக்கை கேட்டு படைப்பைத் துவங்கினார் (36).

पूर्णां तां प्रकृतिं लब्धुं पत्नी भावेन संयतः ।
तपसाऽराधितुं भक्त्या समारेभे महेश्वरः ॥ ३७ ॥

மஹேசவரனோ எனில் (தீர்ந்தாக பிரியாத) பூர்ண-ப்ரக்ருதியான அந்த பராவித்யையை பத்னி பாவத்துடன் அடைவதற்கு மிக அடக்கமாக பக்தியுடன் அவளையே ஆராதனை செய்து வழிபட துவங்கினார் (37).

तज्ज्ञात्वा ज्ञाननेत्रेण विष्णुः परमपूरुषः ।
सोऽपि तामेव संलब्धुं तपस्तप्तुमुपाविशत् ॥ ३८ ॥

பரம புருஷரான மஹாவிஷ்ணுவோ எனில் தனது ஞானக்கண்ணால் மஹேசவரன் தவம் செய்வதை அறிந்து தானும் அந்த பராவித்யையை பத்னீ பாவத்துடன் அடைவதற்கு தவம் செய்ய உட்கார்ந்துவிட்டார். (38)

तज्ज्ञात्वा भगवान् ब्रह्मा सृष्टिं त्यक्त्वा सुनिश्चलः ।
अभिलाषेण तेनैव तपसेऽमुपाविशत् ॥ ३९ ॥

படைப்பை துவங்கிய பிரம்மதேவனோ எனில் மஹேசவரனும், மஹாவிஷ்ணுவும் தவம் செய்வதை அறிந்து படைப்பை விட்டுவிட்டு ஒருமனதாக அதே விருப்பத்துடன் (அந்த பராவித்யையை அடையும் பொருட்டு) தவம் செய்ய உட்கார்ந்தார். (39)

(தொடரும்)

## परशुरामकल्पसूत्रविवरणम्

## பரசுராம கல்ப ஸூத்ர விவரணம்

(2)

**(ஸ்ரீ வக்ரேச பட்டாரகன்)**

ப்ரம்மவித்யோபாஸனைக்குப்பிறகு தீக்ஷையைப்பற்றி விவரிக்கிறோம் என்று கீழே குறிப்பிட்டோம். தீக்ஷை என்ற சொல் ஸாதாரணமாக ஏனைய தர்சனங்களைச் சார்ந்து உபாஸனை செய்பவர்களாலும் உபயோகிக்கப்படுகிறது. அந்தந்த ஆகமப்படி தீக்ஷையளிக்கப்படுகிறது. யாகயக்ஞாதிகளில் தீக்ஷை பெற்று அனுஷ்டிப்பதும் அதனால் தீக்ஷிதர்கள் என்று கூறப்படுவதும் நாம் அறிந்ததே. இங்கு ஸ்ரீவித்யையில்

दीयते ज्ञानमत्यन्तं क्षीयतेपापसञ्चयः ।
यथादीक्षेति संप्रोक्ता परलोकप्रदायिनी ॥

என்று தீக்ஷையில் உள்ள दी (தீ) காரம் பூரண க்ஞானத்தை கொடுப்பதாயும் (क्षा) க்ஷா காரம் பாபங்களை போக்குவதையும் இரண்டினால் கிட்டக்கூடிய இலக்ஷத்தில் பிறப்பின் பயனை பெற்று மறுமையில் உத்தமமான லோகத்தை அடைய வைப்பதே தீக்ஷை என்னும் சொல்லின் பொருள் என்று விளக்கப்படுகிறது. சிவஸாயுஜ்யத்தை கொடுத்து மலங்களை போக்குகிறது என்றும் கூறுவதுண்டு.

புத்தகத்தில் உள்ள மந்த்ரங்களைப் பார்த்து ஜபிப்பது சாஸ்திரங்களில் நிந்திக்கப்பட்டுள்ளது.

पुस्तकेलिखितान् मन्त्रान् दृष्ट्वा जपति यो नरः।
स जीवन्नेवचाण्डालो मृतः श्वा चाभिजायते ॥

என்று கடுமையாக நிந்திப்பதற்கு காரணங்கள் உண்டு.

ஸூத்ரத்தில் ப்ரதானமாக ஸ்ரீ வித்யா உபாஸனையையும் அதற்கு அங்கமான இதர உபாஸ்திகளையும் விளக்க விருக்கையில் தீக்ஷையை விவரிக்கிறோம் என்று முதல் ஸூத்திரத்தில் கூறுவதிலிருந்தே தீக்ஷையின் இன்றியமையாத தன்மை நன்கு புலப்படுகிறது. தீக்ஷையின்றி ஸ்ரீவித்யையை அனுஷ்டிப்பது கூடாது என்பது இதிலிருந்து விளங்கும்.

ஸ்ரீ வித்யையைப் பற்றி பலவித தவறான எண்ணங்கள் பாமர மக்களிடம் மாத்திரமன்றி தங்களை மிகவும் படித்த மேதாவிகளாகக் கருதும் வித்வான்களிடமும் பரவியிருக்கின்றன. இது ஏதோ க்ருஹஸ்தர்கள் செய்யக்கூடாத காரியம் போலும், எல்லாம் துறந்த ஸந்யாஸிகள் தான் ஸ்ரீ வித்யையில் ஈடுபடலாம் என்றும் ஓர் தப்பபிப்ராயம். எந்த காரியம் செய்வதாக இருந்தாலும் அதற்கென்று ஒரு க்ரமம் உண்டு. அதன்படி அதை அனுஷ்டிப்பதால் நன்மையே தவிர தீமையெதுவுமில்லை. முறை தவறி தங்களுடைய சொந்த விருப்பு வெறுப்புகளால் சாஸ்திரத்தை அரைகுறையாய் புரிந்துகொண்டு தான்தோன்றித்தனமாக அனுஷ்டானம் செய்யும்பொழுது தீமைகள் வரத்தான் செய்யும். அது தங்களுடைய தோஷங்களே தவிர ஸ்ரீவித்யையின் தோஷமல்ல. வெவ்வேறு தெய்வங்களிடம் பக்தி செலுத்துவதுபோல் பரதேவதையினிடம் மாத்ரு பாவத்தில் ஒருவன் பக்தி செய்தால் அதில் ஒரு தவறும் இல்லை. ஆனால் ஸ்ரீவித்யானுஷ்டானம் ஒரு யாகானுஷ்டானம். இது வெறும் பூஜையல்ல. யாகானுஷ்டானத்தில் லோபங்கள் ஏதும் நேராமல் மிக ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இதில் சாஸ்திர புத்தியே முக்கியம். தன் சொந்த கல்பனைக்கோ யுக்திக்கோ இடமில்லை. முதலில் தன் தகுதியையும் தேவையையும் ஒருவன் சரிவர புரிந்து கொள்ளவேண்டும்.



ஆர்தன், ஜிக்ஞாஸு அர்தார்த்தி, க்ஞானி என்று நான்கு விதமாக ஈச்வரோபாஸனை செய்பவர்களைப் பற்றி கீதை கூறுகிறது. இதில் முதல் மூன்று விதமானவர்கள் பரதேவதையினிடம் பக்தி செய்யலாமே தவிர ஸ்ரீவித்யானுஷ்டானம் செய்யத் தகுதியற்றவர்கள். ஆகையினால்தான் ப்ரம்ம வித்யோபாஸனையினால் க்ஞானத்தைப்பெற்று தீவிரமாக பரதேவதையை உபாஸிக்க விரும்புவனுக்கு ஸூத்ரம் ஸ்ரீவித்யைப் பற்றி விளக்குகிறது.

ஸ்ரீ வித்யையை தீவிரமாக அனுஷ்டிக்க விரும்பும் ஒவ்வொருவரும் ஆணாயினும் பெண்ணாயினும் முதலில் தன் தகுதியைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டும். வேண்டியதை கொடுக்கும் மனப்பான்மை, அவ்வப்பொழுது தேவைப்படுவதை மாத்திரம் சேர்த்து வைக்கும் மனப்பான்மை, எப்பொழுதும் ஸுகத்தை கொடுக்கும் தன்மை, சிவ விஷ்ணு ஆராதனத்தில் எப்பொழுதும் ஈடுபாடு, பொறுமை, சாந்தஸ்வபாவம், அழகிய தோற்றம், தான் துக்கப்பட்டாவது பிறருக்கு நன்மை செய்யும் மனப்பான்மை, ஊகித்து அறியும் திறன், ஆத்ம விஷயத்தில் எப்பொழுதும் ஈடுபாடு, குழப்பமற்ற மனம், அக்ரூர்களிடம் பரிவு, அறியவேண்டியவைகளை அறிதல், பிறரின் இங்கிதம் அல்லது குறிப்பு அறியும் திறன், ஆஸ்திக்யம், குருமந்த்ரம் தேவதைகளிடம் த்ருடமான பக்தி இவ்வித குணங்களுடன் நாம் இருக்கிறோமா என்று சிஷ்யனாக விரும்புபவன் தன்னையே தான் பரீட்சித்துப் பார்த்துக் கொள்ளவேண்டும். காமக்ரோதாதிகள், பைசுன்யம் என்ற பிறரிடம் அவதூறு சொல்லும் மனப்போக்கு, கஞ்சத்தன்மை, குறுகிய மனப்பான்மை முதலிய தோஷங்கள் இல்லாமல் இருக்கவேண்டும். ஸ்ரீவித்யாமார்க்கத்தில் குருஸ்தானத்தை வகிப்பதற்கு விசேஷ விதிகளுண்டு. அந்த விதிப்படி அதற்குரியவர் அதைச் செய்தால் தான் அந்த தீக்ஷை பூரண பயனளிப்பதாகும். இல்லாவிடில் உபயோகமில்லை. எத்தனையோ சடங்குகள் போல் இதுவும் ஒரு சடங்காக ஆகிவிடும். தீக்ஷிதனுக்கு பூஜை செய்ய மட்டுமே அதிகாரமுண்டு. நவாவரண பூஜை செய்பவர் என்பதைக்கொண்டு அவர் மற்றவருக்கு தீக்ஷையளிக்க முடியாது.

दीक्षितस्याधिकारोस्तिपूजायांचैवनिश्रितं ।
गुरुत्वे तस्य कुत्रापि नाधिकारः कथंचन ॥

என்று சாஸ்த்திரம். முக்யமாக பூர்ணாபிஷேகம் செய்விக்கும் குரு சாம்பவியாக தத்பரனாக இருக்கவேண்டும். அப்படிப்பட்ட ஸ்ரீ குரு கிடைக்காவிடில் அம்மாதிரியான அனுஷ்டானம் செய்த திவ்ய பரம்பரையைச் சார்ந்த சிறந்த கௌளாசார்யரையாவது ஆச்ரயித்து தீக்ஷை பெறவேண்டும். வேண்டிய தகுதியிருந்தால் ஸ்த்ரீகளும் ஸ்ரீவித்யா குருஸ்தானத்தை வகிக்கமுடியும். ஸ்த்ரீ குரு விஷயத்தில் முக்கியமாக யோகினிகள் குருவாக அமைவதைப்பற்றி சாஸ்த்திரம் மிகவும் ஆதரவுடன்தான் பேசுகிறது.

ஸ்ரீ குருவை வரிப்பதற்கு முன் தகுதியுள்ள ஸ்ரீ குருவை தேடிப் பிடிக்கவேண்டும்.

அழகிய தோற்றம், மனதைக் கவரும் தன்மை, அவயவங்கள் எதுவும் ஊனமற்றிருப்பது, எல்லா வேதங்கள், தந்த்ரங்கள் இவற்றின் பொருளையுணர்ந்து விதானங்களையும் (முறைகளையும்) நன்கறிந்திருத்தல், எப்பொழுதும் ஸுமுகமாக இருப்பது, எளிமை, தாய்மை, சந்தேகங்களை தீர்த்து வைத்தல், இங்கிதம் அறிந்திருத்தல், வெளிநோக்குடன் இருப்பினும் ஆத்ம ஸாக்ஷாத்காரத்துடன் இருப்பது, எல்லாம் வல்லவராக இருப்பது, தேசம் காலம் இவற்றை உணர்ந்து நடத்தல், ஆக்ஞா சித்தியினால் நினைத்தபடி செய்யும் ஆற்றல், முக்காலம் உணர்ந்திருத்தல், ஆக்க அழிக்க வல்லமை, போதிக்கும் தன்மை, தன் சக்தியை ஊடு குளிப்பாய்ச்சுவதில் (वेध) திறமை, சாந்தம், எல்லா பிராணிகளிடமும் தயை, இந்திரியங்களை தன் வசத்தில் வைத்திருத்தல், காமக்ரோதாதிகளை ஜயித்திருத்தல், தகுதியில்லாததை அறியும் தன்மை, சிவவிஷ்ணுவிற்கு ஒப்பாக இருத்தல், பொது தன்மை, மந்த்ரங்களையே ஆபரணமாகக் கொண்டிருத்தல், நான் என்னுடையது என்ற எண்ணமற்றிருத்தல், போதுமென்ற மனமுடைமை, ஸ்வதந்திர தன்மை, எண்ணற்ற சக்தி பெற்றிருத்தல், சிறந்த பக்தர்களிடம் வாத்ஸல்யம், தீரத்தனம், எப்பொழுதும் சித்தஸமாதியுடன் இருத்தல், இவை ஸ்ரீ குருவின் இலட்சணங்கள். ஸ்பர்சம் ஒன்றுமில்லாமலே எவருடைய திருஷ்டி ஸ்திரமாக இருக்கிறதோ; பிடிப்பு ஒன்றுமில்லாமலே எவருடைய மனது ஸ்திரமாக இருக்கிறதோ; ப்ரயத்தனமின்றியே எவருடைய வாயு ஸ்திரப்படுகிறதோ அவரே குருவாகத் தகுந்தவர். குரு ஸ்வயம் ஸித்தராக இருந்தால் வேதனம் செய்ய முடியும். இரஸ வாதத்தில் ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட ரஸம் மட்டமான உலோகங்களை வேதம் செய்து உயர்ந்த உலோகங்களாக மாற்றுகிறது. இதற்கு வேதனம் (वेधन) என்று பெயர். குரு முக்தராக இருந்தால் ஸாதகனுக்கு முக்தி அளிக்க முடியும். பாறையை படகில் ஏற்றி ஆற்றை கடக்கலாம். பாறையை பாறையில் ஏற்றி கடக்க முடியாதல்லவா. விஷயம் தெரிந்தவன் தெரியாதவனை உத்தாரம் செய்ய முடியும். முட்டாள் முட்டாளை உத்தாரம் செய்ய முடியாது. பூர்ணாபிஷேகம் செய்து வைப்பவனின் பாதுகையே ஸ்வீகரிக்க வேண்டும். தகுதி வாய்ந்த குருவை அடைந்து வேறொரு குருவை அடையலாகாது. ஏக குருபாஸ்தி ஏகர்ஷி ச்ரத்தயந்த: என்று சாஸ்திரம். விஷயம் தெரியாதவர்களை ஸ்ரீவித்யா குருவாக ஏற்று மந்த்ர ஸ்வீகாரம் செய்திருந்தால் அங்கு மற்றொரு தகுதி வாய்ந்த குருவை அடைவது தவறாகாது. தேனுக்கு ஆசைப்பட்டு வண்டு ஒரு புஷ்பத்திலிருந்து மற்றொரு புஷ்பத்திற்கு போவது போல் ஒரு குருவிடமிருந்து மற்றொரு குருவை ஞானத்தை வேண்டி சிஷ்யன் அடையலாம். ஆகையால் முதலிலேயே முடிந்தவரை தக்க ஸ்ரீவித்யா குருவைத் தேடியடைவது உத்தமம்

(தொடரும்)

## ஸ்ரீபால விநாயக பாலஸுப்ரம்மண்ய ஸ்வாமி தேவஸ்தானம்

### சிவசக்தி ஆச்ரமம்

கைலாஸகோனை, புத்தூர் தாலுக்கா
சித்தூர் ஜில்லா, ஆந்திரப்ரதேசம்

ஸ்ரீபாலவிநாயக பாலஸுப்ரமண்ய ஸ்வாமி ஆலயம் உலக க்ஷேமத்திற்காகவும் முக்கியமாக ஸ்ரீவித்யோபாஸகர்களுக்கும் மஹாநீ மண்டலத்தைச் சார்ந்த உபாஸக குடும்பத்தினருக்கும் ஆத்யாத்மிக ஆதிபௌதிக ஆதிதெய்விகமான தாபங்கள் நீங்கி எல்லாவிதமான க்ஷேமங்களை பெறுவதற்காக பூஜ்யஸ்ரீகுருதேவரால் பத்து வருடங்களுக்கு முன் நிர்மாணிக்கப்பட்டது என்பது வாசகர்களுக்கு தெரிந்த விஷயம். ஸ்ரீவிநாயகனையும் ஸ்ரீசுப்ரம்மண்யனையும் ஒன்றாக பிரதிஷ்டை செய்ய ஸ்ரீகுருதேவர் ஸங்கல்பித்ததும், அதற்கு சுபசூசகம் போல் புஷ்பங்கள் மத்தியிலிருந்து கணபதி ஸுப்ரம்மண்ய பிம்பங்களை தாங்கிய ஒரு டாலர் கீழே விழுந்து உடனே அவர் ஸங்கல்பத்தை நிறைவேற்றி வைக்க தூண்டுதல் புரிந்த விஷயம் ஸ்ரீ G. V. ஸுப்ரமண்யர் மூலம் குறிக்கப்பட்டுள்ளதை வாசகர்கள் படித்திருக்கலாம்.

பூஜ்யஸ்ரீ குருதேவர் இவ்விதம் ஸங்கல்பித்த சில தினங்களில் கணபதியையும் ஸ்ரீசுப்ரம்மண்யனையும் ஒன்றாக தாங்கும் ஒரு படம் ஸ்ரீகுருதேவரின் கண்ணில் பட்டது. 'இதைப் பார்த்தால் உனக்கு என்ன தோன்றுகிறது' என்று வினவினார்கள். 'நன்றாக இருக்கிறது' என்றேன். அவர்களுக்கு அந்த பதில் திருப்தியாகப்படவில்லை என்று புரிந்து கொள்ள எனக்கு நேரமாகவில்லை. ஏதோ ஆழ்ந்த தாத்விகமான கருத்தை மனதிற்கொண்டு அவர்கள் கேள்வியை எழுப்பியிருக்கிறார்கள் என்று புரிந்து கொண்டேன். மிக நெருங்கி அவர்கள் செயல்படும்பொழுது கூர்ந்து கவனித்திருப்பது கொண்டு உடனே அவர்கள் ஸ்வதந்த்ரமாக அமைத்த அஸ்த்ர ஸ்வரூபம் நினைவுக்கு வந்தது. 'இப்பொழுது புரிகிறது......' என்றேன். என்ன என்று உற்று நோக்கினார்கள்.

'ஸப்த தாதுக்களில் சுக்ரம் என்ற பீஜத்திலிருந்து தான் மற்ற தாதுக்களின் விளக்கம் அல்லது வளர்ச்சி. ரஸ, ரக்த, மாம்ஸ, மேதஸ், அஸ்தி, மஜ்ஜா என்ற ஆறு தாதுக்களின் மூல ஸ்வரூபத்திற்கும் ஸுப்ரமண்ய தத்வத்திற்கும் தொடர்பு உண்டு. அதனாலேயே ஷட்கோச ஸ்வரூபன்

வாயைத் தாழ்த்திக் கூறி, அடக்கத்தோடு பணிவாக நிற்கிறார். ஆனால் அவர் பெருமை சொல்லுக்கும் சிந்தைக்கும் அடங்காதது. பாடல் இதோ.

ஏத்தும் அடியவர் ஈரேழ் உலகினையும் படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவராம்; கமழ்பூங்கடம்பு
சாத்தும் குழலணங்கே! மணநாறும் நின்தாளிணைக்கு என்
நாத்தங்கு புன்மொழி ஏறியவாறு நகையுடைத்தே

(தொடரும்)

## परशुराम कल्पसूत्र विवरणम्

## பரசுராம கல்பஸூத்ர விவரணம்

(ஸ்ரீ யக்ஞேச பட்டாரகன்)

4

सू: २

भगवान् परमशिवभट्टारकः श्रुत्याद्यष्टादशविद्याः सर्वाणि दर्शनानि लीलया तत्तदवस्थाऽऽपन्नः प्रणीय , संविन्मय्या भगवत्या भैरव्या स्वात्माभिन्नया पृष्टः पञ्चभिः मुखैः पञ्चाम्नायान् परमार्थ सारभूतान् प्रणिनाय ॥

பகவானான பரமசிவ பட்டாரகர் வேதம் முதலிய பதினெட்டு வித்யைகளையும் எல்லா தர்சனங்களையும் அந்தந்த நிலையில் இருந்து விளையாட்டாக இயற்றி ஸம்வித் (அறிவு) ரூபிணியான தன் ஆத்மாவிற்கு வேறுபடாதவளான பைரவியினால் வினவப்பட்டு ஐந்து முகங்களாலும் எல்லா புருஷார்த்தங்களின் ஸாரபூதமான ஐந்து ஆம்னாயங்களை இயற்றினார் என்று பொதுவாக பொருள்.

பூரணமான ஈச்வரத்தன்மை அல்லது ஐச்வர்யம், தர்மம், கீர்த்தி, செல்வம், க்ஞானம், வைராக்யம் இந்த ஆறுக்கும் பக என்று பெயர். இந்த ஆற்றல்களையுடையவன் பகவான், இவைகளை உடையவள் பகவதி.



சிவ, பரசிவ, பரமசிவ என்ற சொற்களை ஸ்ரீ வித்யாசாஸ்திரத்தின் ஸித்தாந்தத்தை மனதில் கொண்டு பொருள் கொள்ள வேண்டும். சிவ என்ற சொல் சாதாரணமாக சிவ தத்துவத்தை குறிக்கும். பரசிவ என்று சிதம்சத்தை ப்ரதானமாகக் கொண்டு விளங்கும் பொழுதும் பரமசிவ என்று ஆனந்தாம்சத்தை ப்ரதானமாகக் கொண்டு விளங்கும் பொழுதும் உபயோகிக்கப்படுகின்றன. இங்கு பரமசிவ என்று ஆனந்தாம்சத்தைப்ரதானமாகக் கொண்ட நிலையே உணர்த்தப்படுகிறது.

பட்டாரக என்றால் ராஜா. ராஜா என்று சந்திரனுக்கும் (ஸோமனுக்கும்) பெயர். ராஜா என்றால் ப்ரகாசிப்பவன். இங்கு ராஜேச்வரன், ராஜராஜேச்வரன், அல்லது காமேச்வரன், என்று கூறப்படும் பரமேச்வரன் பரமசிவ பட்டாரகன் என்று குறிக்கப் பட்டுள்ளது.

ச்ருத்யாதி பதினெட்டு வித்யைகள் வேதங்கள்-வேதாங்களான சிக்ஷா வ்யாகரணம், கல்பம், சந்தஸ் ஜ்யோதிஷம், நிருக்தம், என்று 6, மீமாம்ஸா, ந்யாயம் (தர்கம்) புராணம் தர்ம சாஸ்திரம் 4 உபவேதங்களான ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம் நீதி சாஸ்திரம் 4 ஆக 18 வித்யைகள். ப்ராம்ம தர்சனம், காணபத தர்சனம், ஸௌர தர்சனம், வைஷ்ணவ தர்சனம், சைவ தர்சனம் சாக்ததர்சனம் என்று ஆறு தர்சனங்கள். "दृश्यते अनेन (இவற்றால் பார்க்கப்படுகிறது) என்று க்ஞான ஸாதனத்திற்கு தர்சனம் என்று பெயர். ப்ரும்மத்தை கணபதி, ஸூர்யன், விஷ்ணு, சிவன், புவனேச்வரி என்று ஏதாவது ரூபத்தில் பார்க்க உதவுவதால் இந்த பிரிவுகளுக்கு தர்சனங்கள் என்று பெயர்.

இவைகளை பரமேச்வரன் அந்தந்த நிலையில் இருந்து கொண்டே இயற்றியுள்ளார். எல்லா சாஸ்திரங்களும் ஈச்வரனால் இயற்றப் பட்டவையே. வெவ்வேறு நிலையிலிருந்து கொண்டு இயற்றியுள்ளார், ரிஷிகளால் இயற்றப்பட்டாலும் அவனே அந் நிலையில் இருந்து இயற்றியிருக்கிறான். ஆகையால் அவை நிர்துஷ்டம்; குற்றமற்றவை பிரமாணம்.

— —

परशुरामकल्पसूत्रविवरणम्

# பரசுராம கல்பஸூத்ர விவரணம்

ஸ்ரீ யக்ஞேசபட்டாரகன்

(5)

அந்தந்த நிலையிலிருந்து கொண்டு ஸ்ரீ பரமேச்வரனே வேதங்கள் முதல் பதினெட்டு வித்யைகளையுமியற்றினார். தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்று நான்கு புருஷார்த்தங்கள். புருஷர்களால் (மக்களா)ல் அர்த்யந்தே விரும்பப்படுகின்றன என்று புருஷார்த்தங்கள். வேதம் முதலிய பதினெட்டு வித்யைகள் இந்த நான்கு புருஷார்தங்களையும் விளக்குகின்றன. தர்மம் அர்த்தம் காமம் மிகவும் விவரமாக விளக்கப்படுகின்றன. புருஷார்தங்களுள் பரமார்தமான நான்காவது புருஷார்த்தமான மோக்ஷம் ஒருவாறு வேதங்களிலும் ஏனைய சில வித்யைகளிலும் விளக்கப்பட்டாலும் விசதமாக தெளிவாக விளக்கப்படவில்லை. மோக்ஷம் என்றால் விடுதலை. விடுதலை பெற்று அனுஷ்டிக்க வேண்டுவது என்ன என்பதெல்லாம் தெளிவாக விளக்கப்படவில்லை. எல்லோருக்கும் வேதம் முதலியவற்றில் அதிகாரம் வழங்கப்படவில்லை. வழங்கப்பட்டவர்களும் மிகுந்த தபஸ் புத்தி கூர்மை இவற்றைக் கொண்டே இலக்ஷ்யத்தைப் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. ஆகையால் பரமகாருணிகனான ஈசுவரன் தத்துவத்தை எல்லோருக்கும் விளக்க வேண்டும் என்ற எண்ணம் வந்தவுடனே குரு வடிவம் தாங்குகிறான், தன் ப்ரகாச ஸ்வரூபத்திற்கு வேறுபடாத விமர்சரூபிணியான சித் ஸ்வரூபிணியாம் தன் சக்தி பைரவியை சிஷ்ய ஸ்தானத்தில் இருத்தி. அவள் பரமார்த்த ஸாரத்தைப் பற்றி வினவ ஸத்யோஜாதவாமதேவ அகோர தத் புருஷ ஈசான என்ற ஐந்து முகங்



களாலும் பூர்வதக்ஷிண பச்சிம உத்தர ஊர்த்வ, என்னும் ஐந்து ஆம்னயங்களை வழங்கியிருக்கிறார். ஆம்னயம் என்று வேதத்துக்கும் பெயர். ஆயினும் தந்த்ர சாஸ்திரங்களை முக்கியமாக ஸ்ரீ வித்யா சாஸ்த்ரத்தை குறிப்பதே ஆம்னயம். ராமாயணத்தில் சீதையை, ராமனை விட்டுப் பிரிந்த நிலையில் வருணிக்குமிடத்து "आम्नायानां अयोगेन विद्यां प्रशिथिलामिव" (ஆம்னயானாம் அயோகேன வித்யாம் ப்ரசிதிலாமிவ) என்று கூறியிருப்பது மிக மிக அர்த்தபுஷ்டியுள்ளது. வேதத்தை ஆவ்ருத்தி செய்வது விட்டுப் போனால் வித்யை மெலிந்து விடும் என்று பொருள் கூறுவது அங்குள்ள அர்த்தத்தை மேலெழுந்தவாறு கூறுவதாகும். வித்யாபதத்தையும் ஆம்னபதத்தையும் சேர்த்து பொருள் கொள்ள வேண்டும்.

தந்த்ரங்கள் பொதுவாக ஆகமங்கள் நிகமங்கள் என்று இருவகை. தொன்று தொட்டுப்பழக்கத்தில் (வழக்கத்தில்) வந்தவை என்று இவை விளக்கப்பட்டாலும் சாதாரணமாக ஈச்வரனை ஈச்வரி அல்லது பைரவி வினவுவதாக அமைந்தது ஆகமமாகவும் ஈச்வரியை (பைரவியை) ஈச்வரன் வினவுவதாக அமைந்தவை நிகமமாகவும் ஒரு காலத்தில் வழங்கப்பட்டு வந்துள்ளன. ஸ்ருஷ்டிப்ரதானமாக விளக்கப்பட்டவை ஆகமமாகவும் ஸம்ஹார (லய) ப்ரதானமாக விளக்கப்பட்டவை நிகமமாகவும் கொள்ளப்பட்டு வந்துள்ளன.

எல்லோராலும் விரும்பப் படுவது ஸுகம, அது (க்ருத்ரிமம்) செயற்கையானது இயற்கையானது என்று இரு விதம். இயற்கையானது மோக்ஷ ஸுகம். செயற்கையானது காம சுகம். இவ்விரண்டிற்கும் தர்மம் சாதனம். தர்மத்திற்கும் சாதனம் அர்த்தம். தர்மத்திற்கும் மோக்ஷத்திற்கும் விரோதமின்றி அந்த காமம் அமைய வேண்டும். ஆகையால் நேராகவோ பரம்பரையாகவாவது (மறைமுகமாகவாவது) அடைய விரும்புவது

புருஷார்த்தங்கள். வேதாதி வித்யைகள் முக்கியமாக செயற்கையாக புருஷார்தத்தையடையும் மார்கத்தை விளக்குகின்றன. இயற்கையான முறையில் மோக்ஷ புருஷார்த் தத்தையடையும் மார்க்கத்தை விளக்குவன ஆம்ருயங்கள். ஈச்வர ஈச்வரிகள் குரு சிஷ்யபதத்திலிருந்து தந்த்ரங்களை வெளிப்படுத்தியிருக்கின்றனர் என்பதை ஸ்வச்சந்த தந்த்ரம் "गुरुशिष्यपदेस्थित्वा स्वयमेव सदाशिवः। प्रश्नोत्तर पदैर्वाक्यैस्तन्त्रं समवतारयत्" என்று கூறுகிறது.

நம் போன்றவர்களின் நன்மைக்காக சித்ரூபிணியாகவும் பரமசிவனை விட வேறு படாதவளாகவும் இருந்து கொண்டு ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரம் என்ற முத்தொழிலையும் செய்ய வல்ல பகவதி பைரவியால் (பரண ரமண வமன ஸாமர்த்தியம் பொருந்திய) வினவப்பட்டு அவளுக்கு பதில் சொல்லும் வியாஜமாக ஐந்து ஆம்ருயங்களையும் பரமசிவன் இயற்றியுள்ளார். குரு சிஷ்ய ஸம்பந்தம், குப்தமாக ஆம்ருயரஹஸ்யங்களைப் பரிபாலிப்பது ஆம்ருயங்களின் உற்பத்தியிலிருந்தே எவ்வளவு முக்கியம் என்பது புலப்படும். ஸ்ரீ வித்யா சாஸ்திரத்திலும் தந்த்ரங்களிலும் காணும் ஆம்ருய உற்பத்தி இவ்விதம். பிற்காலத்தில் நான்கு அல்லது ஐந்து ஆம்ருயங்களை மஹா வாக்கியங்களுடன் தொடர்புபடுத்தி சில் நிறுவனங்களுடன் இணைத்து வருணிக்கப்படுவது அந்த நிறுவனங்களுக்கு ஒரு சிறப்பு ஏற்பட செய்யப்பட்ட காரியம். ஸ்ரீ வித்யை அல்லது தந்த்ரங்களுக்கும் மஹாவாக்கியங்கள் அல்லது ஆம்ருய அடிப்படையில் நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டதற்கும் ஒரு சம்பந்தமும் இல்லை என்பதை உபாஸகர்கள் நினைவிற் கொள்ள வேண்டும்.

(தொடரும்)



## ॥ श्रीमहाभागवतम् ॥

### देवीपुराणम् [१३]

## ஸ்ரீ "மஹாபாகவதம்"

### தேவிபுராணம் [13]

மூன்றாவது அத்யாயம் [முன் தொடர்ச்சி]

*தமிழ்—K. S. V.*

மூ:

तं प्राप प्रकृति र्देवी भूत्वांशेन महामते ।
सावित्री यां द्विजा: सर्वे सन्ध्यात्रयमुपासते ॥ ६८ ॥
तथांशेन समुत्पन्ना लक्ष्मीश्चापि सरस्वती ।
त्रिजगत्पालकं विष्णुं पतिं प्राप स्वलीलया ॥ ६९ ॥
भवन्तौ विषयाऽसक्तौ ब्रह्मविष्णू बभूवतु: ।
शिवोऽभूत् परमो योगी साक्षात्तां प्रकृतिं पराम् ॥ ७० ॥
अन्विच्छन् पूर्णभावेन पत्नीं देर्यापि सत्तमा ।
तथा तपस्यत स्तस्य शम्भो: प्रकृतिरुत्तमा ।
प्रसन्ना वचनं प्राह प्रत्यक्षं जगदम्बिका ॥ ७१ ॥

प्रकृतिरुवाच:—

किंतेऽभिलपितं शंभो वरं तं द्वरयस्व मे ।
दास्यामि परमप्रीत्या तपसा समुपासिता ॥ ७२ ॥

शिव उवाच:—

या पूर्वं प्रकृति: शुद्धा यस्या: पञ्चवराङ्गना: ।
समवाप्स्यसि चास्मांस्तान् ब्रह्मविष्णुमहेश्वरान् ॥ ७३ ॥

# श्री परशुरामकल्पसूत्रविवरणम्

# ஸ்ரீ பரசுராம கல்பஸூத்ர விவரணம்

(ஸ்ரீ யக்ஞேசபட்டாரகன்)

6

இதே கருத்தை நினைவூட்டுகிறது ஸௌந்தர்ய லஹரியின் 31-வது சுலோகம்.

"चतुःषष्ट्या तन्त्रैः सकलमतिसन्धाय भुवनं
स्थितस्तत्तत् - सिद्धिप्रसव परतंत्रैः पशुपतिः ।
पुनस्त्वन्निर्बन्धादखिल पुरुषार्थैकघटना
स्वतन्त्रं ते तन्त्रं क्षितितलमवातीतरदिदम् ॥"

பரமசிவன் அவரவர் நாடும் அந்த அந்தச் சித்தியை மட்டும் அளிக்க வல்ல வேறு தந்த்ரங்களாகிய மஹா மாயா சம்பரம் யோகினீஜால சம்பரம் முதலிய அறுபத்தி நாலு தந்த்ரங்களால் உலகை நிரப்பி மௌனமாகயிருக்கும் பொழுது அம்பிகையே! உன் நிர்பந்தத்தால் எல்லா விருப்பங்களையும் அதாவது அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு புருஷார்த்தங்களையும் விடு என்ற மோக்ஷத்தைப் பெற்று ஸ்ருஷ்டியின் பயனான ஆனந்தானுபவத்தையும் வழங்க வல்ல உன்னுடைய தந்த்ரமாகிய இந்த ஸ்ரீ வித்யையை உலகில் அவதரிக்கச் செய்தார். இங்கும் சிஷ்ய ஸ்தானத்தில் அம்பிகையை வ்யாஜமாகக் கொண்டு ஸ்ரீ குரு ஸ்தானத்தில் இருந்து பரம காருணிகனான பரமசிவன் ஸ்ரீ வித்யையை உபதேசித் தருளினார் என்பது தெளிவு.

## ३) तत्रायं सिद्धान्तः

ஒவ்வொரு சாஸ்த்திரத்திற்கும் தனக் கென்று சில அடிப்படை கொள்கைகள் உண்டு. இவ்வாறே ஒவ்வொரு தர்சனத்திற்கும் ஒவ்வொரு மதத்திற்கும் கொள்கைகள் உண்டு. ஸ்ரீ வித்யை ஒரு மதமோ அல்லது தர்சனமோ அல்ல. காணபத ஸௌர ப்ராம்ம, வைஷ்ணவ, சைவ, சாக்த என்ற ஆறு தர்சனங்



களையும் தனக்கு அங்கமாகக் கொண்டது. இவற்றில் எந்த ஒரு தர்சனத்தை விசேஷமாக உபாஸித்தாலும் ப்ரம்ம நிலை அடைந்து சித் ருபமான அந்த ப்ரும்மத்தை பீடமாகக் கொண்டு விளங்கும் ஆனந்த வல்லியான ஸ்ரீயை உபாஸித்தல் கொண்டு இதற்கு ஸ்ரீ வித்யை என்று பெயர். ஸ்ரீ என்பது சக்தி ருபமாக இருப்பதால் ஸ்ரீ வித்யைக்கும் சாக்தத்திற்கும் சற்று நெருங்கின தொடர்பு உள்ளது போல் தோன்றினும் இரண்டும் வெவ்வேறு என்பதை முன்னமேயே குறிப் பிட்டிருக்கிறோம். சாக்தத்தின் சில அடிப்படை கொள்கைகள் இங்கும் காணப் படலாம். சைவம் சாக்தம் போன்று ஸ்ரீ வித்யைக்கும் ப்ரத்யேகமாக சில கொள்கைகள் உண்டு. சாஸ்த்ரங்களின் இக் கொள்கைகளை ஸித்தாந்தம் என்று கூறுகிறோம். மேல் வரும் சில ஸூத்ரங்களினால் ஸ்ரீ வித்யையின் முக்கியமான ஸித்தாந்தத்தை விவரிக்கிறார். இந்த ஸித்தாந்தத்திற்கு த்ரைபுர ஸித்தாந்தம் என்று பெயர்.

ஸ்ரீ வித்யையின் மூலமான பஞ்சதசியில் மூன்று கண்டங்கள் உண்டு. இச்சாக்ஞான க்ரியா என்று மூன்று சக்திகள், காமேஸ்வரி வஜ்ரேச்வரி, பகமாலினி என்று மூன்று தேவதைகள். காமகிரி பூர்ணகிரி ஜாலந்தரம் என்று மூன்று பீடங்கள். ஸத்வம் ரஜஸ் தமஸ் என்று முக்குணங்கள். ஜாக்ரத் ஸ்வப்னம் ஸுஷுப்தி என்று மூன்று நிலைகள். ப்ரம்ம விஷ்ணு சிவ என்று மும்மூர்த்திகள் மித்ரேச ஷஷ்டீச உட்டீச என்று மூன்று நாதர்கள். இவ்வாறு மூன்று மூன்றாக இருக்கும் நிலைகளை தன் மூன்று கோணங்களாலும் குறிக்கும் மத்யத்ரி கோணமே த்ரைபுரம். அதன் மத்தியில் வாஸம் செய்வதால் அம்பிகை த்ரிபுரா அவளுடைய ஸித்நாந்தம் த்ரைபுரஸித்தாந்தம். ஆத்ம தத்வம் வித்யா தத்வம் சிவ தத்வம் அல்லது ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்கள் என்பதே மூன்று கோட்டைகள். த்ரிபுரன் என்னும் அஸுரன் இதையே குறிக்கிறான். அவனை ஸம்ஹாரம் செய்வதே த்ரிபுர ஜயம். இரும்பு செம்பு வெள்ளி கோட்டையாக வேதம் உருவகப் படுத்தி ஒவ்வொரு கோட்டையையும் தனித்தனி அழித்தும் முடியாமற் போகவே எல்லாவற்றையும் சேர்த்து அஸ்த்ரத்தால் அழித்து ப்ரமசிவன் த்ரிபுரஸம்ஹாரம் செய்தார் என்னும் ஆக்யானம் த்ரிபுரத்தையே குறிக்கிறது. அப்படிப்பட்ட த்ரிபுர ஸம்பந்தமான ஸித்தாந்தம் த்ரைபுர ஸித்தர்ந்தம். தீக்ஷை பெற விரும்பும் ஒவ்வொருவரும் தீக்ஷைக்கு முன் இந்த ஸித்தாந்தத்தை நன்கு கற்று தெளிய வேண்டும். சக்ஷுர்பந்தனம் என்று கண்களை கட்டி அந்தர்முக வ்ருத்தியை ஏற்படுத்தி தீக்ஷை செய்யப்படினும் கண்முடித்தனமாக ஸ்ரீ வித்யையில் தீக்ஷை பெறும்படி சாஸ்த்

திரம் கூறவில்லை. குரைபுரளித்தாந்தந்தை ஸ்ரீ குருதீக்ஷைக்கு முன் எடுத்துரைக்கவேண்டும், அதைக் கேட்டு தெளிந்து சாஸ்திரத்தை ச்ரத்தையுடன் பக்தியுடன் அனுஷ்டிக்க விருப்பம் இருக்கும் தீவிரஸாதகனுக்கே தீக்ஷை செய்ய சாஸ்திரம் இடம் அளிக்கிறது.

## षट्त्रिंशत्तत्त्वानि विश्वम् ।

விச்வம் என்றால் ப்ரபஞ்சம். இந்த ப்ரபஞ்சம் என்பது 36 தத்வங்களாலானது. 36 தத்வங்களே உலகம்; சிவ, சக்தி, ஸதாசிவ, ஈச்வர சுத்த வித்யா என்ற ஐந்தும் காரணமான சிவ தத்துவங்கள். மாயா, வித்யா, கலா, ராக, கால, நியதி, புருஷ என்ற ஏழும் ஸூக்ஷ்மமான வித்யா தத்துவங்கள்.

ப்ரக்ருதி, அஹங்கார, புத்தி, மனஸ், த்வக், சக்ஷு, ச்ரோத்ர, ஜிஹ்வா, க்ராண, வாக், பாணி, பாத பாயு; உபஸ்த, சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்த ஆகாச வாயு, அக்னி, ஸலில, ப்ரதிவி என்ற 24-ம் ஸ்தூலமான ஆத்ம தத்துவங்கள் ப்ரத்வி முதல் சிவ தத்துவம் வரையுள்ள இந்த 36 தத்துவங்களாலேயே இந்த சித் அசித் ரூபமான விச்வத்தின் உத்பத்தி அல்லது விளக்கம்.

(தொடரும்)

## ஸ்ரீ பாலவிநாயக-பாலஸுப்ரமண்ய ஸ்வாமி

### தேவாலயம்

### கைலாசகோனே வனம்

### 11-வது-ஆண்டு ஆடி கிருத்திகை விழா

### (4-8-80 to 4-8-80)

"கூட்டிய வா என்னைத் தன் அடியாரில்", என தேவியின் அருள் பிரவாகத்திலே கரைந்து ஆனந்தமாகப் பேசுவர் அபிராமி பட்டர். இவ்வாண்டு ஆந்திரப் பிரதேசம், புத்தூருக்கருகில், இயற்கை வனப்பில் அமைந்த கைலாசநாத கோனையில் சிவசக்தி ஆசிரமத்தில் நடைபெற்ற 11-வது ஆண்டு ஆடிக் கிருத்திகை விழாவுக்கு (4-8-80) பூஜ்யஸ்ரீ தேவி அவர்கள் பிரசன்னமாகி சென்னை, பங்களூர், பாம்பே என பற்பல தேசங்களில் இருந்தும் வந்து கூடி நின்ற உபாசகர்களுக்கு ஆனந்தம் மேலிடும்படி அருள் பாலித்தார்கள்.



4-8-80 கிருத்திகைக்கு இரண்டு நாள் முன்னரே கைலாச கோனே மலைச் சாரல் களை கட்டி விட்டது. சனிக்கிழமை அன்று (2-8-80) பால விநாயக பாலசுப்பிரமணியருக்கு மஹான்யாஸ ஜபத்துடன் ஆயிரம் குடம் எடுத்து சுத்த தீர்த்தாபிஷேகம் செய்தார்கள். நூறு இளநீர் அபிஷேகம் செய்தார்கள். மலை அருவி ஓங்கார நாதமிட அன்பர்கள் அகண்ட சண்டீபாராயணம் செய்தார்கள். பூஜ்யஸ்ரீ குருதேவரின் பாத ஸ்பர்சம் பெற்ற இடத்திலே 3-8-80 அன்று ஸ்ரீவித்யா ஹோமம், சண்டி ஹோமம் நடந்து "வஸோர்த்தாரா" நடைபெற்ற போது அந்த வனாந்தரப் பகுதியே பூஜ்யஸ்ரீ தேவி நாதரின் அருள் ஒளியில் மூழ்கியது.

4-8-80 ஆடிக்கிருத்திகை-வழக்கம் போல் மாலையிலே நூற்றுக்கணக்கான 'காவடிகள்' வந்தன. இரவு சுவாமி புறப்பாடு நடைபெற்றது என்பதைச் செய்தியாகச் சொல்கிறேன்.) என்றாலும் சிறப்பாக காலையிலே பார்க்க வேண்டும். ஆலய ஸன்னிதியில் கணபதி ஹோமமும், சுப்பிரமணிய ஹோமமும் கர்ப கிருஹத்தில் பாலவிநாயக, பாலசுப்ரமணி மூலவருக்கு அபிஷேகமும் நடைபெற ஆச்ரமத்தில் பூஜ்யஸ்ரீ தேவி அவர்கள் தம் கமலச் சேவடி சிவக்க நீர் விழ்ச்சி அருவிக் கரையை அடைந்தார்கள். அடியார்கள் நீர் விழ்ச்சி அருவியிலே நீராடி, ஈர ஆடை உடுத்து, நீறுபூசி, மலர்க் காவடிகளை தோளிலே எடுத்து வைத்து பூஜ்யஸ்ரீ தேவியைச் சூழ்ந்து நின்று ஆடத் தொடங்கியதைத் தான் பலர் அறிவார்கள், காவடிகள் கோயிலுக்கு வந்த நேரம் தெரியாது. 'வேல் முருகா வேல் முருகா கார்த்திகேயனே வேல் முருகா வேல் முருகா சக்தி பாலனே' என பூஜ்யஸ்ரீ தேவி நாதர் வாழ்ந்த அந்தப் புனித மலைப் பிராந்தியமே எதிரொலிக்கும்படி அன்பர்கள் குதித்துப் பாடிய பாடல் இன்னும் காதுகளில் ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கிறது. கண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவாறு தான் என்னே!

(அனந்தன்)

## ஒரு நல்லவரின் மறைவு

சென்ற 9-7-80 அன்று மதுரை ஸ்ரீ L. கிருஷ்ணய்யர் அவர்கள் இப் பூத உடலை நீத்து ஸ்ரீ குருதேவரின் சரணங்களை அடைந்த செய்தியை மிக வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். இவர் மஹதி மண்டலத்தின் அன்பர்களில் ஒருவர், மண்டலத்தின் அங்கத்தினரான ஸ்ரீமதி சிவானந்த விஜயலட்சுமியின் தகப்பனருமாவார். அன்னாரின் ஆத்ம சாந்திக்

12

श्रीपरशुरामकल्पसूत्रविवरणम्

# ஸ்ரீ பரசுராம கல்பஸூத்ரவிவரணம்

## (7)

யக்ஞேசபட்டாரகன்

தத்வங்கள் என்பவை சாச்வதமானவை. ஸ்தூல ரூபத்தில் உள்ள ப்ரபஞ்சம் ப்ரலயத்தில் தத்வங்கள் வடிவில் ஒடுங்கியிருக்கும். பிறகு இந்த முப்பத்தாறு தத்வங்களிலிருந்து விச்வம் உருவெடுக்கிறது. சிவ சக்தி தத்வங்கள் உண்மையில் இரண்டு தத்வங்களாக கருதப்படினும் அவை சேர்ந்தே இருக்கின்றன. கேவலம் நிஜஸ்வருபத்தில் பரம் பொருள் இருக்கும் பொழுது அது சிவதத்துவ வடிவிலேயே இருக்கிறது. இச்சை ஞானம் க்ரியை என்ற த்ரிசக்திகளின் ஸூஷ்மரூபமான சாந்தா என்னும் சக்தி "நான் பலவாக ஆகுவேன்" बहुस्यां प्रजायेय) என்ற எண்ணத்தை பரம் பொருளுக்கு கொடுத்து அர்த்த ஸ்ருஷ்டி சப்த ஸ்ருஷ்டி ரூபமான ப்ரபஞ்சத்தை தோற்றி வைக்கிறது. ப்ரபஞ்ச வாஸனா ரூபமாக இருந்து கொண்டு தனக்கு அபேதமாக இருப்பதை " (अहं) என்றே பார்க்கும் தத்துவமே சக்தி தத்துவம். ப்ரபஞ்ச மற்ற கேவலசித்தின் ப்ரகாசம் சிவதத்வம் என்றால் சித்தின் ப்ரபஞ்சவாஸனாரூபமான விமர்சமே சக்தி தத்வம். பேதத்தை குறிக்கும் நிலை ஸ்பஷ்டமாக இல்லாத பொழுது 'இது நான்'(अहं इदं)என்னும் உணர்வு ஸதாசிவதத்வம். பேதத்தை குறிக்கும் நிலையுடன் தனக்குள் ஒருவித அபேத தன்மை விளக்கிக் கொண்டு 'இது உலகம் 'जगदिदं' என்ற உணர்வோடு இருப்பது ஈச்வரதத்வம். ஸ்வரூப பேதத்தை விட்டு, ஐக்யத் தன்மையை உணர்த்திக் கொண்டு இருக்கும் நிலை சுத்த வித்யை.





இந்நிலையில் ஜகத் நானே என்ற ஸதாசிவனின் வ்ருத்தி இருந்து கொண்டிருக்கும். ஸ்வரூபத்தை மறைத்து ஸ்வதந்த்திர சக்தியுடன் பேதத்தன்மை ஏற்படுத்துவது மாயா தத்வம். இதில் ஜகத் इदं जगत्' என்ற ஈச்வரனின் பேதத்தையுணர்த்தும் வ்ருத்தி இருந்து கொண்டிருக்கும். முன் சொன்ன வித்யா தத்வத்தை மறைக்கும் சக்தியுள்ள அதற்கு மாறுபட்ட தத்வம் அவித்யா என்ற ஏழாவது த்தவம் ஜீவனிடம் இயற்கையில் உள்ள எல்லா செய்யும் சக்தியுடைமை (सर्वकर्तृत्वं) सर्वकर्तृत्वं என்பதை ஸங்கோசப்படுத்துவது கலா என்ற தத்வம். ஜீவனிடம் இயற்கையில் இருக்கும் த்ருப்தியுடன் இருத்தல் नित्यतृप्तिः என்பது சுருங்கி சிலவற்றில் த்ருப்தியின்மையால் ராக என்ற ஒன்பதாவது தத்வமாகிறது. ஜீவனிடம் உள்ள நித்யத் தன்மை (नित्यता) மறைந்து இருக்கிறது உண்டாகிறது வளருகிறது மாறுதல் அடைகிறது குறைகிறது நசிக்கிறது என்ற ஆறு நிலையில் ஸங்கோசத்தையடைந்து காலம் என்ற தத்வமாகிறது. காலம் இந்த ஆறு நிலைகளை (षड्भाव)த்தை கொண்டு தான அறியப் படுகிறது. பரமசிவனும் ஜீவனும் வேறுபடாதவர்களாகையால் பரமசிவனிடம் உள்ள அந்த ஸர்வஸ்வாதந்த்ரியம் முன் சொன்ன அவித்யையால் மறைக்கப்பட்டு ஸங்கோசமடைய தேவைப்படும் காரணமே நியதி தத்வம். நியமனம் செய்வதால் நியதி. மேற் சொன்ன நியதி, கால, ராக, கலா அவித்யா என்ற ஐந்து தத்துவங்களை ஆச்ரயித்து அவற்றால் ஸங்கோசத் தன்மையை பெற்றிருப்பது புருஷதத்வம். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களின் ஸம நிலையான சித்தமெனப்படுவதே ப்ரக்ருதி தத்வம். ஸத்வ குணம் தமோகுணம் இவற்றை அடக்கி ரஜோகுணம் மேலிட்ட ஸங்கல்பம் (நினைத்தல்) செய்ய கரணமாக இருப்பதே மனஸ்தத்வம்.

ரஜஸ்தமஸ் இக் குணங்களை அடக்கி ஸத்வ குணம் மேலிட்டிருக்கும். அந்தக் கரணம் நிச்சயிக்க உதவும்

புத்தி தத்துவம். ரஜோ குணம் ஸத்வ குணம் இவற்றை அடக்கி தமோகுணம் மேலிட்டு விகல்பத்திற்கு மூல மான அந்தக் கரணம் அஹங்கார தத்வம். சப்தத்தை க்ரஹிக்கும் இந்திரியம் சரோத்ர (காது) தத்வம் ஸ்பர்சத்தை க்ரஹிக்கும் இந்திரியம் த்வக் (தோல்) தத்வம். ரூபத்தை க்ரஹிப்பது சக்ஷுஸ் (கண்) தத்வம். ரஸத்தை க்ரஹிப்பது ஜிஹ்வை என்ற ரஸன (நாக்கு) தத்வம். கந்தத்தை க்ரஹிப்பது க்ராண (மூக்கு) தத்வம். வ்யக்தமான வார்த்தைகளை உச்சரிக்க உதவு வது வாக் தத்துவம். பிடிப்பதற்கும் விடுவதற்கும் உதவுவது பாணி (கை) தத்வம். போதல் வருதல் முதலியவற்றிக்கு உதவுவது பாத (கால்) தத்வம். மலம் கழிக்க உதவுவது பாயு தத்வம். புணர்சிக்கு உதவுவது உபஸ்த தத்துவம். ஸூக்ஷ்மமான ஆகாச வடிவில் உள்ளது சப்த தத்வம். ஸூக்ஷ்ம வாயு ரூப மானது ஸ்பர்சதத்வம், ஸூக்ஷ்மதேஜோ ரூபமானது ரூபதத்வம். ஸூக்ஷ்ம ஜலரூபமானது ரஸதத்வம். ஸூக்ஷ்ம ப்ருத்வீ ரூபமானது கந்த தத்வம். இடமளி க்கும் தன்மை கொண்ட ஸ்தூலமான இடைவெளி ஆகாச தத்வம். எப்பொழுதும் கதி அல்லது சலனம் கொண்டது வாயு தத்வம். உஷ்ணகுணம் கொண்டது. தேஜஸ்தத்வம். த்ரவகுணம் கொண்டது ஜலதத்வம். கடினத் தன்மை கொண்டது ப்ருதிவீ தத்வம்.

மேற்கண்ட முப்பத்தாறு தத்துவங்களின் கூட்டே விச்வம் ஜகத் எனப்படுவது. ப்ரபஞ்சத் திலுள்ள எல்லா ஸ்ருஷ்டிகளும் இந்த தத்துவங்களைக் கொண்டே செய்யபட்டவை தத்துவங்களை ஆழ்ந்து அவற்றின் மூல ஸ்வருபத்தில் நோக்க வேண்டும். பர மானந்த தந்த்ரம் ம்ருகேந்த்ரஸம்ஹிதை முதலிய வற்றில் தத்வங்கள் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

(தொடரும்)



# ஜய விஜயீபவ தேவீநாத

## பொருளும் கீதமும்

ப்ரம்ம விஷ்ணு ருத்ர ஈச்வர சதாசிவன் என்னும் பஞ்சமூர்திகள் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் திரோதா ணம் அனுக்ரஹம் என்னும் படைப்பு காத்தல், அழித் தல் மறைத்தல் அனுக்ரஹித்தல் என்னும் ஐந்தொழிலை செய்கிறார்கள். இவர்களின் ஸமஷ்டியே ப்ரம்மம் என்று வழங்கப்படுகிறது. இவர்கள் ஒவ்வொருவருமே ப்ரம்மஸ்வருபர்கள். இவர்களின் சக்திகள் முறையே சரஸ்வதி லக்ஷ்மி பார்வதி, ஈச்வரி மனோன்மனி அல்லது வாமாஜ், யேஷ்டா, ரௌத்ரி, அம்பிகா, சாந்தா, எனப் படுவர். ஸமஷ்டியான ப்ரம்மம் பரசிவ பராசக்தி மயம். குஹை எனப்படும் பரமாகாசத்தில் ஸ்ருஷ்டியின் பொருட்டு முதன்முதலில் தோற்றுவிக்கப்பட்ட இந்த ப்ரம்மம் அங்கு பொங்கி விரிவடைவதால் ப்ரம்மம் என்ற பெயரை அடைகிறது. தனக்கு பிறகு உண்டாகும் நிலை களைக் கொண்டு இது பரப்ரமமம் என்றும தான் மாத் திரம் இருக்கும் நிலையில் கேவலப்ரம்மம் என்றும் வழங்கப்படும். இதுவே பரசித் அல்லது பரசிதி என்றும் கூறப்படுகிறது. 'சித் என்னும் மூலப்பொரு ளால் ஆக்கப்பட்டு ஆனந்தத்தை விளக்கும் நிலையில் உள்ளதால் இது பரசித் என்று கூறப்படுகிறது. இந்த ப்ரம்மம் என்ற பரசிதி நிலையை தோற்றுவிக்கும் மூலப் பொருளான ஆனந்தத்தை வேதம் மஹதீ என்றும் மஹாசக்தி என்றும் கூறுகிறது. எல்லாவற்றிற்கும் மூலம் ஆனந்தம் அதிலேயே எல்லாம் விளங்குகின்றன. அதிலேயே எல்லாம் லயம் அடைகிறது என்றிருப்பி னும் இந்த மூலப்பொருள் பிரிக்கமுடியாத தொடர்பு கொண்டதும் தனித்தன்மை கொண்டதும் ஆனால் ஒன்றில் ஒன்று ஒடுங்கும் அல்லது லயம் அடையும்

14 14

**பண்ட புத்ரவதோத் யுக்த பாலா விக்ரம நந்திதா**

சதுர் பாஹு முதல் உபமயன் வரை முப்பது பண்டாஸுரனின் குமாரர்கள் வர்ணிக்கப்பட்டுள்ளனர் ஒன்பது வயது பெண்ணாக பாலை வர்ணிக்கப்பட்டுள்ளாள். பண்டபுத்ரர்களின் வதத்தில் ஈடுபட்டுள்ள பாலையின் பலத்தைக் கண்டு சந்தோஷம் கொண்டுள்ளாள். ஆணவம், மாயிகம் கார்மிகம் என்ற மலங்களே பண்ட புத்ரர்கள். ஶுத்தவித்யாவான பாலையினால் இந்த மலங்கள் அழிகின்றன என்று பொருள். (தொடரும்)

श्रीपरशुरामकल्पसूत्रविवरणम्

## ஸ்ரீ பரசுராம கல்பஸூத்ரவிவரணம்

**(8)**

**(ஸ்ரீ யக்ஞேசபட்டாரகன்)**

शरीरकञ्चुकितः शिवोजीवः, निष्कञ्चुकः परशिवः

முப்பத்தாறு தத்வங்களாலானது இந்த விச்வம் சிவதத்துவம் முதல் ப்ருதிவீ தத்துவம் வரையான தத்துவங்களாலேயே இந்த ப்ரபஞ்சம் ஸ்ருஷ்டிக்கப் பட்டுள்ளது. சுருங்கச் சொன்னால் சிவசக்தி தத்துவங்கள் என்ற முதல் இரண்டு தத்துவங்களின் விகாஸமே விச்வம். ஜடசக்தி சிச்சக்தி இவற்றின் கார்யங்களாக ஜடமயமாயும் சேதன வடிவாயும் ப்ரபஞ்சம் விளங்குகிறது. முப்பத்தாறு தத்துவங்களை இருவகையாகவும் பிரிக்கலாம். சில த்ருச்யமாக மாத்திரம் உள்ளவை, அவை ஜடம். சில த்ருஷ்டாவாக மாத்திரம் உள்ளவை அவை சேதனம். ஜீவன் சேதனன். சேதனனான ஜீவனுக்கும் ஜடமான ஸ்ருஷ்டிக்கும் வித்தியாஸம் சுலபமாக



விளங்குவது போல் ஜீவனுக்கும் சிவன் அல்லது பரமசிவன் எனப்படும் ப்ரபஞ்சகர்தாவிற்கும் வித்தியாஸம் கண்டு கொள்ளலாம்.

சரீரம் என்று உடலுக்குப் பெயர். சீர்யதே என்று எப்பொழுதும் அழிந்து கொண்டே இருக்கிறது என்று சரீரத்திற்கு பெயர். சரம் போன்று கதியுள்ளது ஜீவனை சேர வேண்டிய இடத்தில் சேர்க்க வைக்கிறது என்றும் சரீரம் சொல்லப்படும். ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்று சரீரம் மூவகை. சிவசக்தி ஸதாசிவன் ஈச்வரன் சுத்தவித்யை இந்த ஐந்து தத்துவங்களாலானது காரண சரீரம். அதிலுள்ள மலம் கார்மிகமெனப்படும். மாயா முதல் புருஷன் வரையான ஏழு தத்துவங்களாலானது ஸூக்ஷ்ம சரீரம். அதிலுள்ள மலம் மாயிக மலமெனப்படும். ப்ரக்ருதி முதல் ப்ருத்வீ வரையான இருபத்திநான்கு தத்துவங்களாலான ஸ்தூல சரீரம் ஆணவ மலத்தைக் கொண்டது.

ஜீவன் ப்ரக்ருதி முதலிய தத்துவங்களுடன் கூடிய புருஷனெனும் தத்துவரூபன். முப்பத்தாறு தத்துவங்களையும் படைத்து தத்துவங்களுக்கு அதீதனாக விளங்கும் பரமசிவன் வேறு ஜீவன் வேறு. ஆகையால் வேதாகம தந்த்ரங்களின் இலக்ஷ்யமான அத்வைதம் எப்படி பொருந்தும் என்று மேலெழுந்தவாறு கேள்வி எழலாம்.

வேதாகம தந்த்ரங்கள் உண்மையில் கூறும் அத்வைதம் வேறு. நாம் புரிந்து கொண்டு விட்டதாக நினைக்கும் அத்வைதம் வேறு. ஜீவனிடம் ஜீவத்துவம் இருக்கும்வரை ஜீவனுக்கும் சிவனுக்கும் பேதம் இருந்து கொண்டுதான் இருக்கும். வாதத்திலோ சாஸ்த்திர சர்ச்சையிலோ அது மறையாது. அஹம் என்ற உணர்வு சரீரம் மனது புத்தி அஹங்காரம் சித்தம் இவற்றையும் இதற்கு ஆதாரமாகவுள்ள சிவசக்தி ரூபமான சித்தையும் சேர்த்து அனுபவ ரூபமாக வரும்

பொழுது எல்லா பேதங்களும் ஒழிந்து எப்பொழுதும் பிரிக்க முடியாத சிவசக்தி, என்ற இரட்டையாகவே அஹம் என்பதின் ஸ்புரணம் இருக்கும். சிற்சில சமயங்களில் சமப்ரதானமான ப்ரகாசவிமர்ச வடிவில் உள்ள அந்த சிவசக்தி இரட்டை உணர்வில் ஒன்றில் ஒன்று ஒடுங்கி கேவலம் ப்ரகாச வடிவாகவோ அல்லது கேவலம் விமர்ச வடிவாகவோ அனுபூதியேற்படலாம். இது போன்றே சிவானந்த ரூபனான காமேச்வரனும் சக்தியானந்த ரூபையான காமேச்வரியும் நித்ய தம்பதிகளாகவே விளங்குகின்றனர். ஸாதகனின் அஹம் என்ற உணர்வு அந்த இரட்டையர் சிவானந்த சக்தியானந்த ரூபமாக ஏற்பட்டு சிற்சில சமயம் ஒன்றில் ஒன்று ஒடுங்கியிருக்கும் பொழுது கேவல ஆனந்த ரூபமாக இருக்கும் நிலை ஏற்படுவதுண்டு. இதுவே வேதங்களை தழுவிய ஸ்ரீவித்யா சாஸ்த்திரத்திற்கு ஸம்மதமான அத்வைத நிலை. ஜீவன் தன் ஸ்வரூபத்தையுணருதல் ஒரு நிலை. உணர்ந்தபின் சிவசக்தி அல்லது ப்ரகாச விமர்ச ரூபமான தான் அத்வைதனாக கேவல சித் ரூபனாக அல்ல கேவல ஆனந்த ரூபனாக விளங்குவது வேறொரு நிலை. இவற்றை ஒன்றுடன் ஒன்று குழப்பிக் கொள்ள வேண்டிய தேவையில்லை.

தத்துவங்கள் நித்யமானவை. ப்ரகாச விமர்ச ரூபமான சிவசக்தி தத்துவங்களே மேன்மேலும் ஸ்தூல ரூபத்தையடைந்து முப்பத்தாறு தத்துவங்களாலான விச்வமாகத் திகழ்கின்றன. சித் ரூபமாக த்ருஷ்டா விளங்கும் பொழுது த்ருச்யமான விச்வமும் சித் ரூபமாகவே விளங்குகிறது. அந்நிலையில் தனக்கு அன்னியமாக விச்வம் விளங்குவதில்லை. சரீரத்தை அபிமானித்த ஜீவன் தான் வேறு சரீரம் வேறு என்று நினைக்காதது போல் சித் ரூபமாக தன்னையுணர்ந்த நிலையில் விச்வத்தில் ஏற்பட்ட அபிமானத்தினால் அகண்டமான அனுபூதியே ஏற்படுகிறது. ஆனால் சித் ரூபமாக தன்னை யுணராத நிலையில் தன்னிடம் இருக்கும் பூரண ஸ்வாதந்



த்ரயம் உணரப்படாமல் தன் ஸ்வாதந்த்ரயம் அளவுக்குட்பட்டது என்ற எண்ணம் ஏற்பட்டு தனக்கு சரீரமாக விளங்க வேண்டிய விச்வத்தை தனக்கு பாஹ்யமான சட்டையாக நினைக்கும் பொழுது சித் ரூபனான தன்னை பத்தனாகவும் ஜீவனாகவும் நினைக்கும் நிலை ஏற்படுகிறது. விபுவான தன்னை அணுவாகவும் தனக்கு அபேதமாகவுள்ளதை பின்னமாகவும் சிவ ஸ்வரூபமாக இருந்தும் சுபாசுப கர்மங்களை செய்பவனாகவும் ஜீவன் ஆகிறான். அதற்கு காரணமான மலங்களே ஆணவ மலம் மாயிக மலம் கார்மிக மலம். கஞ்சுகம் என்றால் சட்டை. சட்டை உடலை மறைக்கிறது. அது போல் தன்னிடம் உள்ள பரசிவ ஸ்வரூபத்தை மறைப்பதால் ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களாகிற மூன்று சரீரங்களும் சட்டைகள். அப்படிப்பட்ட சட்டைகளால் மறைக்கப்பட்டவனாக தன்னை கருதும் பரசிவனே ஜீவன். மறைவு அல்லாத நிலையில் அவனே பரசிவன். உண்மையில் சரீரம் பந்தத்திற்கு காரணமல்ல. அது சட்டையுமல்ல, தத்துவங்கள் தங்கள் தங்கள் நிலையில் சுத்தமாக இருக்கும் பொழுது சரீரம் சிறந்த கருவியாகவே அமையும். ஆத்ம ஸ்வரூபத்தின் அகண்ட அனுபவத்திற்கு சரீரம் தடையாக அல்லது திரையாக இருக்காது. ஜீவனிடம் இருக்கும் பரிமிதமான ஸ்வாதந்த்ரயம் துஷ்பிரயோகமாக்கப்பட்டு ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்கள் ஆணவ மாயிக கார்மிக மலங்களால் மலினமாகும் பொழுதே சரீரம் என்ற ஆவரணத்தால் ஆத்ம ஸ்வரூபம் மறைக்கப்பட்டு பரசிவன் பத்தனாக ஜீவனாக தன்னை கருதுகிறான் என்று பொருள்.

ஜீவர்கள் மூவகைப்படுவர்; சுத்தர்கள், மிச்ரர்கள், அசுத்தர்கள்; சிவசக்தி ஸதா சிவர் சுத்தர்; அசுத்தர் மனுஷ்யர் முதலியவர்; வசிஷ்டாதிகள் மிச்ரர்; தத்வாதீர் பரசிவன் என்று கூறுவதுண்டு. இங்கும் முன் சொன்னபடி தன் தன்ஸ்வரூப அனுபவத்தை வைத்துத் தான் சுத்தமான அசுத்தமான அல்லது மிச்ரமான நிலை என்று சொல்ல வேண்டும். (தொடரும்)

16

மார்கம் எனப்படும். குண்டலினியின் விகாஸம் பூரணமாக ஏற்படும் பொழுது குாலகுல ஸஹஸ்ராரங்களில் அதன் விலாஸம் ஏற்படுகிறது. பரையின் ஸ்வரூபமும் அதுவே. யக்ஞேசநுத பாதே ஶ்ரீ யக்ஞேசனால் வணங்கப்பட்ட சரணங்களையுடையவளே! மாத்ருகே—அகாராதிக்ஷகாராந்தமான மாத்ருகா ஸ்வரூபிணியே. முக்கியமாக பரா என்ற சப்த நிலையில் மாத்ருகா ஸ்வரூபமாக இருப்பதால் மாத்ருகே என்று விளிக்கப்படுகிறாள். விச்வகல்யாணி உலகம் முழுவதுக்கும் க்ஷேமத்தை வழங்குபவளே!

த்ரிநயனி—சூர்ய சந்த்ர அக்னி என்ற மூன்று கண்களையுடையவளே நான் உன்னை த்யானிக்கிறேன் என்று பொருள். ஶ்ரீலலிதா ஸஹஸ்ர நாமத்தின் த்யான ச்லோகமாக வழக்கிலிருக்கும் "ஸிந்தூராருண விக்ரஹாம்" என்ற ச்லோகத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கும் ஸ்வரூபம் ஶ்ரீ பராதேவியின் ஸ்வரூபமே. ஶ்ரீ லலிதையின் ஹ்ருதயத்தை நன்கு உணர்ந்தவளாகக் கருதப்படும் பரையின் ப்ரணாதம் ஶ்ரீ காமேச்வர காமேச்வரி நிலைகளையும் ஶ்ரீ லலிதையின் ஸ்வரூபத்தையும் நன்கு உணர இன்றியமையாதது. சூன்யமென்ற பரிபாஷைச் சொல்லால் விளக்கப்படும் சிவ நிலையில் பிந்துவின் சலனத்தால் தன் ஸ்புரணத்தை ஸாதகன் உணரும் பொழுது சக்ரத்தின் ஆவிர்பாவம். அந்நிலையில் அவன் சரீரமே சக்ர வடிவாக அமைகிறது. பரையின் ஸ்வரூபமும் சக்ர ஸ்வரூபமே.

परशुरामकल्पसूत्रविवरणम्

## பரசுராம கல்ப ஸூத்ர விவரணம்

## 9

(ஶ்ரீயக்ஞேச பட்டாரகன்)

स्वविमर्शः पुरुषार्थः

ஸ்வவிமர்ச: புருஷார்த்த:

அர்த்யதே இதி அர்த: என்று எல்லோராலும் விரும்பப்படுவது குறிக்கப்படுகிறது. புருஷர்களால் (ஸ்த்ரீகளாலும்) விரும்பப்படுபவை புருஷார்த்தங்கள். புருஷ என்ற சொல் ஸ்த்ரீ, புருஷர் இரு பாலாரையும் இங்கு குறிக்கிறது. புரி சரீரத்தில் சேரதே தங்கியிருப்பவன் என்று புருஷ என்ற சொல்லுக்கு



ஜீவன் பொருள். ஜீவ ஸாமான்யத்தால் விரும்பப் படுவது தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம். இந்த நான்கிற்கும் புருஷார்த்தங்கள் என்று பெயர். தர்மத்திற்கும் மோக்ஷத்திற்கும் குந்தகம் விளைவிக்காதவாறு மத்தியில் உள்ள அர்த்தமும் (பொருளீட்டுவதும்) காமமும் அமைய வேண்டும். மோக்ஷ என்ற சொல்லுக்கு விடுதலை என்று பொருள். எதிலிருந்து விடுதலை உலகத்திலிருந்தா? அதற்குபிறப்பானேன்? எப்படி வாழ்ந்தால் தர்மம் அர்த்தம் காமம் இவற்றை ஸம்பாதிக்கும் பொழுதே எதிலேயும் கட்டுண்டு இராமல் தான் ஸங்கோசமானவன் ஸ்வாதந்த்ரயம் அற்றவன் பந்தத்துடன் இருப்பவன் என்ற உணர்வு இல்லாமல் இருக்க முடியுமோ அதுவே மோக்ஷம். பற்பல தர்சனங்களில் மோக்ஷஸ்வரூபம் பலவாறு வருணிக்கப்பட்டுள்ளது. ஶ்ரீவித்யா சாஸ்திரத்தில் மோக்ஷம் என்பது ஒரு நிலை. அதைப் பெற்று இந்த சரீரத்துடன் இருக்கும் பொழுதே முக்தனாக உணர்வு பெற்று அதற்கும் மேலான ஸ்ருஷ்டியின் பயனான ஆனந்தானுபவத்தைப் பெற வைப்பதே ஶ்ரீ வித்யா சாஸ்திரத்தின் முக்கிய லக்ஷ்யம்.

ஆகையால் ஸ்வவிமர்ச: புருஷார்த்தம் என்று கூறுகிறது. ஸ்வ தன்னுடைய விமர்ச: அறம் என்ற உணர்வைப் பெறுவது ஜீவனின் முக்கிய லக்ஷ்யம். முன் ஸூத்திரத்தில் சரீர உணர்வால் தன்னை ஸங்கோசமானவனாக உணர்பவன் ஜீவன் ஸங்கோசத் தன்மை நீங்கி இருப்பவன் பரசிவன் என்று கண்டோம். தன்னை தன்னுடைய வாஸ்தவ ஸ்வரூபத்தையுணர்வதே ஜீவனின் முக்கிய இலட்சியம். எல்லா தர்சனங்களுமே இதைத் தான் கூறுகின்றன. ஶ்ரீவித்யா சாஸ்திரத்தின் விசேஷமென்னவென்று தோன்றலாம். தன்னை தான் உணரும் பொழுது வாஸ்தவத்தில் தான் சிவசக்தி ஸ்வரூபன் என்று உணர வேண்டும். அந்த வுணர்வு சித்ருபமாக இருக்கலாம். சித்ருபத்தில் ப்ரகாச பாகமோ விமர்ச பாகமோ தலை தூக்கி நிற்கலாம். ஆனால் ப்ருமத்தை ஸத்சித் ஆனந்த ஸ்வருபமாகக் கொண்டு சித்தை பீடமாகக் கொண்டு மிளிரும் ஆனந்தமே தன் ஸ்வருபமாக உணருவதே ஶ்ரீவித்யா சாஸ்திரப்படி புருஷார்த்தம். ஜீவனின் சரம லக்ஷ்யம். ஸ்வாத்மா லலிதை என்று கூறப்படுவதால் அஹம் ஆனந்த: என்ற உணர்வே உண்மையில் ஸ்வவிமர்சம். அந்த ஆனந்த ஸ்வருபத்தை ஒவ்வொருவரும் உணர வேண்டும். அஹம் சித் என்ற உணர்வு பெற்று அந்த சித் மூலம் தன் ஆனந்த ஸ்வருபத்தையுணர வேண்டும். அந்த ஆனந்த உணர்வே ஸ்வவிமர்சம். அதுவே ஜீவனின் சரம லக்ஷ்யம்.

## वर्णात्मका नित्याः शब्दाः

**வர்ணாத்மகா: நித்யா: சப்தா: |**

முன் ஸூத்ரத்தில் கூறப்பட்ட ஸ்வவிமர்சம் எப்படி கிட்டும்?
அதற்கு உபாஸனை தேவை. யாரை உபாஸிப்பது யாரை உபா
ஸித்தால் அந்த நிலை கிட்டுமோ யார் அந்த நிலையில் எப்போதும்
விளங்குகிறாளோ அவளை உபாஸிக்க வேண்டும். ஆனந்த ஸ்வ
ரூபிணியாக ஸ்ரீலலிதை வருணிக்கப்படுகிறாள். ஸ்வாத்மாவும் அப்
படியே. ஸ்ரீ என்ற சொல் கேவலானந்த நிலையையுணர்த்து
கிறது. ஸ்ரீ: கலாகேவலா என்று ஸ்ரீவித்யா ஸூத்ரம். ஸ்தூல
மான உருவத்துடன் ஸ்ரீ லலிதை வருணிக்கப்படுகிறாள். பாசம்
அங்குசம் கரும்பு வில் புஷ்ப பாணங்கள் இவைகளை ஏந்திய
நான்கு கைகளுடன் பருத்த தகில்கள் மெல்லிய இடை ஸர்வ
லோகங்களும் அதிசயித்த வண்ணம் லாஸ்ய நடை போட்டு புன்
முறுவல் பூத்த முகமண்டலம். இவற்றுடன் விளங்கும் ஆனந்த
வல்லியின் உருவம் லலிதையின் (உபாஸ்ய தேவதையின்) ஸ்தூல
உருவம். பஞ்சதசி அல்லது ஷோடசி என்ற ஸ்ரீவித்யா மூல
மந்த்ரங்கள் அவளுடைய ஸூக்ஷ்ம ரூபம். ஸ்தூலரூபத்தை
த்யானித்து ஸூக்ஷ்ம ரூபமான மந்த்ரத்தை ஜபம் செய்ய
வேண்டும் உபாஸனைக்கு இன்றியமையாதது மந்த்ரங்கள்.
ஆகையால் மந்த்ரங்களின் ஸ்வருபத்தை இந்த ஸூத்ரம் விளக்கு
கிறது.

எல்லா மந்த்ரங்களுமே அ முதல் க்ஷ வரையுள்ள மாத்ருகா
க்ஷரங்களைக் கொண்டு ஏற்பட்டவைகளே. அக்ஷரங்களை வர்ணங்
கள் என்று சொல்கிறோம். ஆனால் உண்மையில் அவை அக்ஷரங்
கள். நக்ஷரத்தி அழிவற்றவை என்று அக்ஷரங்கள். அவை நித்ய
மானவை. அது கொண்டே மந்த்ர மயமான வேதங்களை நித்ய
மானவை அனாதி என்று கூறுகிறோம். சப்தங்கள் உண்மையில்
நித்யமானவை. அவை சப்த அலைகளாக ஆகாசத்தில் எப்பொழு
தும் விளங்கிக் கொண்டிருக்கின்றன. அவை அழிவதில்லை.
காலம் தேசம் அவைகளை அழிப்பதில்லை. தகுந்த காலம் தேசம்
இவை அமையும் போது அவைகளை மறுபடியும் உணரமுடியும்.
அவைகளை க்ரஹிக்கும் கருவி தான் தேவை. ரிஷிகளுக்கு மந்த்ர
த்ரஷ்டாக்கள் என்று பெயர். ரிஷிகள் மந்த்ரங்களை உண்டு
பண்ணவில்லை. அவர்கள் ஸமாதி நிலையில் தங்கள் உள்ளத்
திரையில் மந்த்ரங்களை அக்ஷரங்களின் குறிப்பிட்ட கோர்வையை
ஸாக்ஷாத்கரித்திருக்கின்றனர். அப்படி ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட
வையே நான்கு வேதங்களும். ஸப்த கோடி மஹாமந்த்ரங்களும்
அப்படியே. (தொடரும்)

## வாசகர்கள் கவனிக்கவும்

### மஹதீ

மஹதீ பத்திரிகை வெளிக்கொண்டு வருவதற்கு உண்டாகும்
பேபர் செலவு அச்சடிக்கும் செலவுகள் வரவர அதிகமாகிக்கொண்டு
வருகின்றது. மேலும், பாலர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் உபயோக
மாக இருக்கும்படி பல பகுதிகள் சேர்க்க வேண்டும் என்ற அவா
இருந்து வருகிறது. தற்போதுள்ள நன்கொடையாளர்களின்
எண்ணிக்கை கணிசமாக அதிகரித்தால் நமது நோக்கங்கள் நிறை
வேறக்கூடும். அன்பர்கள் தங்களால் இயன்றவரை நன்கொடை
யாளர்களைச் சேர்க்க உதவுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

### நவாக்ஷரீ ஜப மஹாயக்ஞம்.

25.12.77 பிங்கள வருஷம் மார்கழி பௌர்ணமியில் எல்லோ
ரும் சேர்ந்து சங்கல்பித்துக்கொண்ட ஸ்ரீ சண்டீ நவாக்ஷரீ நவ
கோடி மந்த்ர ஜப மஹாயக்ஞம் 9 வது கோடியை அடைந்து
பூர்த்தியாக இருக்கிறது. முதல் கோடி பூர்த்தியை ஒட்டி முதல்
நவாக்ஷரி ஹோமம் காளயுக்தி வைகாசி வைசாக பூர்ணிமையில்
ஆச்ரமத்தில் நடந்தது. தொடர்ந்து ஒவ்வொரு கோடி ஜபம்
முடிந்ததும் நவாக்ஷரீ ஹோமம் ஆச்ரமத்தில் நடந்து வந்திருக்
கிறது. இப்போது 9 வது கோடி ஜபம் பூர்த்தியாவதை முன்னிட்டு
வருகிற 14.6.81 அன்று வைகாசி கடைசி தேதியில் விசாகம்
நக்ஷத்ரம் கூடிய ஞாயிறன்று நவாக்ஷரீ ஹோமம் நடக்க இருக்
கிறது. ஜபம் செய்து வரும் அன்பர்கள் எல்லோரும் ஜபக்கணக்
கையும், சேர்ந்திருக்கும் தொகையையும் ஜூன் 7 தேதிக்குள்
அனுப்பி எல்லோரும் நேரில் வந்து இந்த ஜபமஹாயக்ஞத்தின்
பூர்த்தி அனுஷ்டானத்தில் கலந்து கொண்டு பிரஸாதத்தைப்
பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அன்று
யாக அனுஷ்டான முடிவில் பூஜ்ய ஸ்ரீ தேவி அவர்கள் இதுவரையில்
பூஜையில் இருந்து வரும் சண்டீ டாலர்களை வழங்குவார்கள்.

### ஸ்ரீ குருபர்வா

இவ்வருடம் ஸ்ரீ குருபர்வா, (ஆனி சுக்ல த்ருதியை) 4.7.81
அன்று வருகிறபடியால் பூஜ்ய ஸ்ரீ குருதேவரின் சிஷ்யர்கள், பிர
சிஷ்யர்கள் எல்லோரும் தங்களாலியன்ற திரவியத்தியாகத்தைச்
செய்து பர்வாவில் கலந்து கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்
படுகிறது.

யுள்ள வெவ்வேறு சக்கரங்களில் அந்தந்த அனுபவங்களைப் பெற்று க்ரந்திகள் பேதிக்கப்பட்டு ஸஹஸ்ரதள கமலம் வரை சென்று அகுலஸஹஸ்ராரத்திலும் பிறகு குலஸஹஸ்ராரத்திலும் மாறி மாறி பல்வேறு ஆனந்த நிலைகளையநுபவிப்பதான பிறவியின் பயனைப் பெற முடியும். ஸாதகனை மூலாதார சக்ரத்துள் ப்ரவேசிக்க முடியாதபடி ஆஸுர சக்திகள் அவனை தடுத்து அன்னமய ப்ராணமய கோசங்களிலேயே சிக்க வைப்பதே விக்ன யந்த்ரங்களை ஸ்தாபித்தல். ஸ்ரீ காமேச்வர முகா லோகத்தால் மூலாதாரத்தில் ஸ்ரீ கணேச சக்தியை தோற்றுவித்து அவன் உதவியால் விக்னயந்த்ரங்களை உடைத் தெரிந்து ஸாதகனை தெய்வீக மார்கமான ஸுஷும்னமார்க ஸஞ்சாரத்தில் ஈடுபடுத்து வதே ஸ்ரீ மஹா கணேச அவதார ரஹஸ்யம்.

புராணங்களில் ஸ்ரீ கணேச உற்பத்தி பார்வதி நீராடப் போகுமுன் தன் சரீரத்தின் அழுக்கை எடுத்து அதிலிருந்து ஒரு சிறுவனைப் படைத்து காவலுக்கு வைத்து சென்றதிலிருந்து வருணிக்கப்பட்டிருப்பதையும் தாத்விக த்ருஷ்டியுடன் நோக்க வேண்டும். மேலும் இங்கு கூறப்பட்டிருக்கும் ஸ்வரூபம் ஸ்ரீ வித்யா கணபதியான மஹா கணபதியின் ஸ்வரூபம் என்றும் மனதிற் கொள்ளவும்.

### ९८. महागणेशनिर्भिन्नविघ्नयन्त्रप्रहर्षिता ।

### 98. மஹா கணேச நிர்பின்ன விக்னயந்த்ர ப்ரஹர்ஷிதா

ஸ்ரீ மஹாகணேசன் தன் ஆற்றலால் விக்னயந்த்ரங்களை யெல்லாம் உடைத் தெறிந்தார். அவருடைய செய்கையால் பர தேவதை மிகவும் ப்ரஸன்னமானாள். ஸ்ருஷ்டி வ்யஷ்டிஸ்ருஷ்டி ஸமஷ்டி ஸ்ருஷ்டி என்று இருவகை. ஒரே விதமாக இருக்கும் பல வ்யஷ்டிகளின் கூட்டத்தை கணம் என்போம். ஒரு கணத்தைச் சார்ந்த எல்லாவ்யஷ்டிகளிலும் அந்த கணத்துக்கு இன்றியமை யாத தான பொது குணம் இருந்தே தீரும். பசு, எருமை, செம்மறியாடு, வெள்ளாடு, மனிதர் அது போன்று அவற்றில் ஆண் பெண் இம்மாதிரி பல கணங்கள். முதலில் கணத்தை மனதில் வாங்கிக் கொண்டால் தான் அதன் வ்யஷ்டியைப் பற்றிய ஸ்ருஷ்டி ஸாத்யம். பஞ்ச பூதங்கள் அல்லது 36 தத்வங்கள் என்றால் இவை கணங்களை குறிக்கும். அதன் பிறகு அதனதன் வ்யஷ்டிஸ்ருஷ்டி தொடரும். இந்த கண ஸ்ருஷ்டி கணேச சக்தி



யைப் பொருத்தது. பல்வேறு விக்னங்கள். அவைகளையும் சில கணங்களாகக் கொள்ள முடியும். அவற்றின் நாசத்தால் எல்லா வ்யஷ்டி விக்னயந்த்ரங்கள் அழிக்கப்படுகின்றன. ஸ்ருஷ்டிசக்தி களின் படைகளை நடத்திச் செல்லும் பரதேவதை ஸ்ருஷ்டிக்கு குந்தகம் விளைவிக்கும் விக்னயந்த்ரங்களை மஹா கணேச சக்தி யைக் கொண்டு களைந்து எறிகிறாள் என்றும் கொள்ளவும்.

परशुरामकल्पसूत्रविवरणम्

## பரசுராம கல்ப ஸூத்ர விவரணம்

## (10)

(ஸ்ரீ யக்ஞேசபட்டாரகன்)

சப்தங்கள் நித்யமானவை என்று வ்யாகரண சாஸ்த்ர ஸித் தாந்தம். நாம் உச்சரிக்கும் ஒவ்வொரு சப்தமும் ஆகாசத்தில் சப்த அலை வடிவில் பரவி ஸூக்ஷ்மமாக இருக்கின்றன. அவைகள் க்ரஹிக்கும் சக்தி வாய்ந்த கருவியின் உதவியால் க்ரஹிக்கப்படு கின்றன. வேதங்கள் சப்த வடிவில் எப்பொழுதும் இருக்கின்றன. அவைகளை மந்த்ரத்ரஷ்டாக்களான மஹரிஷிகள் ஸமாதியில் க்ரஹித்து நமக்கு வழங்கியிருக்கின்றனர். சப்தங்களைப் பற்றிய உண்மை நவீன விஞ்ஞான சாதனைகளின் மூலம் ஒருவாறு அறிய முடிகிறது. அவ்விதமிருக்க மந்த்ர வடிவான சப்தங்கள் தேவ தைகளின் ஸூக்ஷ்மரூபமாகவே கருதப்படுகின்றன. ஆகையால் தேவதைகளைப் போன்றே அவையும் நித்யமானவை. அக்ஞானம் இருக்கும் வரை தான் தனக்கு அந்நியமாக ஒரு தேவதை இருப்ப தாகத் தோன்றுவதால் அக்ஞானம் நீங்கும் வரை தான் மந்த்ர வடிவான சப்தங்களும் நித்யமானவை என்ற வாதம் அழகாக இருந்தாலும் மந்த்ரத்தின் உண்மை ஸ்வரூபத்தை யுணரும் பொழுது பராஸ்வரூபிணியான பராவாக நித்யமான வளாக இருப்பது போன்று பராவாக்கிலிருந்து வந்த வர்ண ஸமுதாயமான மந்த்ரங்களும் அவளுடைய ஸூக்ஷ்மரூபமாக நித்ய மாகவே விளங்குகின்றன என்று புலப்படும். ஈச்வரனின் நிச்வாச ரூபமாக வேதங்கள் வருணிக்கப்படுவது போல் ஈச்வரனின் முகத் திலிருந்து ஸப்த கோடி மஹாமந்த்ரங்கள் வெளி வந்துள்ளன

19

என்று ஸ்காந்த புராணம் கூறுகிறது. இங்கு ஏழுகோடி மந்த்ரங்கள் என்று ஸங்க்யையை குறிப்பதைவிட ஏழு விதமான மந்த்ரங்கள் என்றே பொருள் கொள்ள வேண்டும். கோடி என்ற சொல் வகை என்ற பொருளில் உபயோகிக்கப்படுவதுண்டு ஒரு மந்த்ரம் என்றால் அதில் நம: ஸ்வாஹா, ஸ்வதா, வஷட், வௌஷட், ஹூம், பட், ஹூம்பட் என்ற ஏழு சொற்களில் ஒன்று அவசியம் இருக்க வேண்டும். ஆகையால் மந்த்ரங்கள் ஏழுவகைகளாகப் பிரிக்கப்படுகின்றன. பரா நிலையிலிருந்து இந்த்ரியங்களால் க்ரஹிக்கப்படும் அளவிற்குவர்ண வடிவில் விளங்கும் சப்தங்கள் நித்யமானவையே என்று பொருள்.

## ८. मंत्राणां अचिन्त्यशक्तिता ।

### 8. மந்த்ராணும் அசிந்த்யசக்திதா.

மந்த்ரங்களின் சக்தி நினைத்துப் பார்க்க முடியாதது. அது எப்படி வேலை செய்கிறது என்று ஊகிக்கக்கூட முடியாது. அதன் ஆற்றல் அளவிட முடியாதது. மந்த்ரத்தின் மூலத்தில் விளங்குவது பராவான சித்ஸ்ருபமாகையால் அங்கு இங்கு என்று சொல்ல முடியாமல் எங்கும் பரவி எல்லாவற்றிற்கும் மூலமாக விளங்கும் சித்தின் சக்தியை அளவிடமுடியாததால் மந்திரங்களின் சக்திகளையும் அளவிட முடியாது. அவைகளைக் கொண்டு எதையும் ஸாதிக்க முடியும். ஸாதகனின் மனோத்ருடமும், ஸாதனையும் முக்கியமானவை. அவைகளைக் கொண்டு அவன் தன்ஸ்வருபத்தை எவ்வளவுக்கெவ்வளவு உணருகிறானோ அவ்வளக்கவ்வளவு மந்த்ரங்களின் ஆற்றலும் வெளிப்படும்.

---

## श्री திரஸ்கரணி

रागः मणिरङ्गः तालः आदि

पल्लवी

मामवश्री महामाये माहेन्द्रनीलमणिकाये (मामव)

अनुपल्लवी

मोहिनि निजगुह्यमोहितरिपुसंघे
पशुजन मनोक्षितिरस्करि मुक्तचिकुरे (मामव)

चरणं

नीलतुरगारूढे कराजीनीलखड्गे
श्रीयवनिके दिव्य कुलयज्ञपालिके
भगवति यज्ञेशपालिनि श्रीरुद्रजाये (मामव)

ராகம் மணிரங்கு — ஆதி தாளம்

பல்லவி

மாமவ ஸ்ரீ மஹாமாயே
மாஹேந்த்ர நீலமணிகாயே (மாமவ)

அனுபல்லவி

மோஹினி நிஜகுஹ்ய மோஹிதரிபுஸங்கே
பசுஜன மனோக்ஷிதிரஸ்கரி முக்த சிகுரே (மாமவ)

சரணம்

நீல துரகாருடே கராஜீ நீலகட்கே
ஸ்ரீயவனிகே திவ்ய குலயக்ஞ பாலிகே
பகவதி யக்ஞேச பாலினி ஸ்ரீ ருத்ர ஜாயே (மாமவ)

### திரையும் திரைக்கு அதிதேவதையும்

திரஸ்கரிணி ஸ்ரீ வார்த்தாளியின் அங்க தேவதையாகக் கருதப்படுகிருள், ஸாதகன் தன் ஸாதனைக்கு இடையூறுகள் வராமல் இருப்பதற்கு தன்னை ஒரு விதத்தில் தனிமைப்படுத்திக்

கொள்கிறுள். பகட்டு ஆடம்பரம் இவை ஸாதனைக்கு குந்தகம் விளைவிக்கும். பிறர் கண்ணுக்கு படாமல் தனிமைப் படுத்திக் கொண்டு ஸாதனையை செய்ய வேண்டும். ஸாதகனையும் அவனுடைய ஸாதனையையும் ஸாதனையின் பெருமையறியாத பசுக்களின் கண்களில் படாமல் எப்படி காப்பது. வேண்டும் போது தான் மாத்திரம் வெளி தொடர்பு கொள்ள ஸ்வாதந்திரியம் பெற்று தனக்கு இடைஞ்சல் செய்யும் எல்லா சக்திகளுக்கும் தான் புலப் படாதவாறு செய்யும் திறன் ஸ்ரீ திரஸ்கரிணி தேவிக்கு உண்டு. ஆகையால் ஸ்ரீ வித்யா சாஸ்திரத்தில் தீவிர சாதனை செய்யும் ஒவ்வொருக்கும் ஸ்ரீ திரஸ்கரிணியின் பிரஸாதம் தேவை. அது மாத்திரம் அல்ல, ஸாதகனுடைய அகக்கண்ணுக்கும் புறக்கண்ணுக்கும் எல்லாம் துலங்கும்படி செய்வேக்கும் சக்தியும் ஸ்ரீ திரஸ்கரிணிக்கு உண்டு. அஞ்ஞான திரையை விலக்கி பரதேவதையின் வாஸ்தவஸ்வரூபத்தை அனுபவிக்கும் பேறு பெற வழிவகுப்பவளும் அவளே. அப்படிப்பட்ட ஸ்ரீ திரஸ்கரிணிதேவியின் சிறப்பை விளக்குவதே மேற்கண்ட கீதம்.

இந்திர நீலக்கல் போன்று நீலவர்ணத்துடன் விளங்கும் ஸ்ரீமஹா மாயா ஸ்வரூபிணியான திரஸ்கரிணி தேவி என்னை காத்தருள்வாய். எல்லோரையும் மோஹிக்கவைக்கும் சக்தியடைத்த மோஹினி, தான் குஹ்ய (இரகசியமான ஜனனேந்த்ரியத்தால்) மோகம் அடையும்படி செய்யப்பட்ட சத்ருக்களின் வைஸ்யத்தை உடையவளே! பந்தத்திற்குட்பட்ட பசுபாவத்துடன் இருக்கும் மனிதர்களின் மன கண் முதலியவற்றை மறைப்பவளே! விரிந்த கேசபாரத்துடன் விளங்குபவளே! நீலநிறமான குதிரையின் மீதேறி கையில் நீல நிறமான கத்தியை ஏந்தி விளங்குபவளே! காமேச்சவர காமேச்வரிகள் அந்தரங்கத்தில் இருக்கும் ஹம்ஸதூல மஞ்சத்தை சுற்றி ஜவனிகை என்ற திரையாக இருப்பவளே! திவ்யமான குலயாகத்தை ரக்ஷித்து நடத்திக் கொடுப்பவளே! ஏ பகவதி! ஸ்ரீ யக்ஞேசனை காப்பவளே! ஸ்ரீ ருத்ரனின் மனைவியாக விளங்கும் ஸ்ரீ திரஸ்கரிணி தேவி என்னை காப்பாற்றுவாய்.

ஸாதகர்கள் ஒவ்வொருவரும் இவளுடைய ப்ரஸாதத்தை அவசியம் பெற வேண்டும். பூஜ்யஸ்ரீ குருதேவருக்கு ஜவனிகையாக வருணிக்கப்படும் இவளே சிவப்பு நிறத்துடன் திருமருகலில் ஆமோதருள நாயகி ஆலயத்தில் தரிசனம் கொடுத்து வரப்ரஸாதத்தையருளியதும் அதுமுதல் அன்னாரின் ஸ்ரீ சரணத்தை தரிசிப்பவர்களுக்கு ஸ்ரீ திரஸ்கரிணியின் ப்ரஸாதம் எளிதாக கிடைப்பதும் ஸாதகர்கள் நினைவிற் கொள்ளவும்.

## ஸ்வஸ்திக் அமைப்பு — ஓர் உகந்த உபயோகம்

### (A humble Suggestion to sadhakas)

"மங்களாராத்திகம்" செய்ய ஒன்பது விளக்குகள் அதற்கு விதிக்குள்ள கிரமப்படி ஏற்றப் படுகின்றன. ஒன்று மத்தியிலும் மற்ற எட்டு விளக்குகள் அதைச் சுற்றிலும் அமைக்கப் படுகின்றன. "ஏருல்லேகயா ப்ரஜ்வால்ய" என்ற சூத்திரத்தின் படி மாயா பீஜ உச்சாடனத்துடன் இவ் விளக்குகள் ஏற்றப் படுகின்றன. ஏற்கனவே ஏற்றிய விளக்குகளின் ஜ்வாலை கையில் சுட்டுக் கொள்ளாமல் ஏற்ற வேண்டியிருக்கிறது என்பது ஒரு சாமான்ய செயல். சௌகர்யப் பிரச்னையே! ஆனால் அந்த சௌகர்யத்தை யடைந்து வேறு பயனுள்ள வாறும் இந்த விளக்கேற்றும் செயலை அமைக்க முடியுமா? இதோ, பக்கத்தில் வரையப் பட்ட வரைபடத்தில் கண்டபடி ஏற்றினால் ஒருவாறு "ஸ்வஸ்திக்" அமைப்பு முறையில் விளக்குகள் ஏற்றப்படும். இடது (சக்தி) பக்கத்தில் ஆரம்பித்து வலது(சிவ) பக்கத்தில் கொண்டு வந்து முடிக்கலாம். ஜோதிகளை இந்த வரிசையில் ஏற்றுவது சாலவும் பொருத்தமானதே யாகும். "ஸ்வஸ்திக்" அமைப்பின் ஸூக்ஷ்மார்த்தம் மேலே விரிவாக விளக்கியுள்ளது போல் இத்தகைய செயல் நமது "உள்ளொளியை" ஆத்ம தேஜஸ்ஸை "பெருக்க" உதவுமென்றே எனது எண்ணம்.

(இத்துடன் "ஸ்வஸ்திக் அமைப்பு" என்ற தலைப்பின் கீழ் ஸ்ரீ குருக்ருபா அவர்கள் எழுதிக் கொடுத்திருந்த தொடர் முடிவடைகிறது. இந்தத் தொடர்ச்சியை வாசித்து வந்த சாதகர்களின் மனதில் அநேக எண்ண அலைகள் உருப்பெற்றிருக்கலாம். ஸ்வஸ்திக் அமைப்பின் பல்வேறு உபயோகங்களையும் அறிந்தவர்கள் இருக்கலாம். தங்கள் அனுபவ ரீதியான கட்டுரைகளை வழங்கினால் மலர் மூலம் எல்லா சாதகர்களும் பயன் பெறலாம். மாத்ருகா ந்யாஸம், ஸ்வஸ்திக அமைப்பு இந்தத் தொடர்களுடன் ஸ்ரீகுருக்ருபா அவர்கள் தங்கள் அனுபவத்துக்கு எட்டிய ஸ்ரீகுரு ஸ்வரூபத்தைப் பற்றியும் எழுதி வழங்கியுள்ளார்கள். அது அடுத்த இதழில் பிரசுரமாகும். இம்மாதிரி அனுபவபூர்வமான கட்டுரைகள் மேலும் நம்மை ஊக்குவிக்க ஸ்ரீ குருக்ருபா அவர்கள் இல்லையே என்கிற வருத்தத்தை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறோம்.)

---

## श्री परशुराम कल्पसूत्र विवरणम्

## ஸ்ரீ பரசுராம கல்பஸூத்ர விவரணம்



### (ஸ்ரீ யக்ஞேச பட்டாரகன்)

९, संप्रदाय विश्वासाभ्यां सर्वसिद्धिः ।

9. ஸம்ப்ரதாய விச்வாஸாப்யாம் ஸர்வஸித்தி: ।

"ஸ்வஸ்வரூபத்தை உணருதலான புருஷார்த்தத்தை அடைய ஸாதனமானது மந்த்ரம். மந்த்ர அவயவங்களான வர்ணங்கள் நித்யமான சப்தங்கள். அவற்றின் ஆற்றல் அளவற்றது," என்று முன் கூறப்பட்டது. மந்த்ரங்களுக்கு அவ்வளவு ஆற்றலிருந்தால் ஏன் எல்லோருக்கும் எளிதில் ஸித்திகள் ஏற்படுவதில்லை? என்று எழும் கேள்விக்கு பதில் கூறுவது போல் அமைந்தது இந்த ஸூத்ரம். மந்த்ரம் என்பது ஸ்ரீ குருவால் உபதேசிக்கப்படுவது. அப்படிப்பட்ட மந்த்ரம் ஸித்திக்க வேண்டுமானால் ஸம்ப்ரதாயமும் விச்வாஸமும் இன்றியமையாதவை. குரு பரம்பரையில் வரும் ஆசாரத்தை கடைபிடித்தல் என்பது ஸம்ப்ரதாயம். ஸம்ப்ரதாய சுத்தி என்பது மிக மிக முக்கியமானது. வேதங்களை படித்து விட்டு ச்ரௌத ஸூத்ரங்களை மேலெழுந்தவாறு பரிசீலித்து விட்டு ஒருவன் யாக அனுஷ்டானங்களை சரிவர செய்ய முடியாது. எல்லாவற்றையுமே புத்தகத்தில் எழுதி வைத்துவிடவில்லை சில விஷயங்களை எழுதவும் முடியாது. ஆகையால் சிறந்த ரித்விக்குகளைக் கொண்டு அவர்கள் ஸம்ப்ரதாயத்தில் கற்றுத்தெளிந்த அனுபவத்துடன் செய்யப்படும் யாக அனுஷ்டானங்களே பலனை அளிக்கவல்லது. அது போல ஸ்ரீவித்யா சாஸ்த்ர அனுஷ்டானத்துக்கு அதை நன்கு கற்று அனுஷ்டானத்தில் கடைபிடிக்கும் குரு பரம்பரையின் ஆசார ஞானம் மிக மிக முக்கியம். அம்பாள் உபாஸனையில் பரவலாக ஒரு மோகம் ஏற்பட்டிருக்கும் இன்னாளில் தடி எடுத்தவர்கள் எல்லாம் தங்களை சண்டப்ரசண்டர்களாக பறை சாற்றிக் கொள்ளும் இன்னாளில் ஸ்ரீவித்யா சாஸ்த்ர மர்மங்களை உணர்ந்து கடைபிடிக்கும் குருபரம்பரை அரிதிலும் அரிதாகி விட்டிருக்கிறது.

சாதாரண ஸம்ஸ்க்ருத பாண்டித்யத்தை வைத்துக்கொண்டு மனம்போனபடியெல்லாம் சாஸ்த்ரத்தை விவரிக்கும் குருக்களே அதிகம். அவர்கள் செயல்கள் எல்லாம் யாரோ சில வ்யக்திகளை திருப்திபடுத்துவதற்கும் அதன் மூலம் சில லௌகிக நன்மைகளைப் பெறுவதற்காகவுமே அமைந்துள்ளன. சாஸ்த்ர அனுஷ்டான விஷயங்களில் நிர்பயத்வமும் விருப்பு வெறுப்பு இல்லாதிருப்பதும் மிக மிகத் தேவை. ப்ராம்மம், காணபதம், ஸௌரம், வைஷ்ணவம், சைவம், சாக்தம் என்ற ஆறு தர்சனங்களையும் ஸோபானங்களாக (படிகளாக)க் கொண்ட ஸ்ரீவித்யா சாஸ்த்ரத்தில் ப்ரம்மவித்யை என்ற பெயரில் பல வேஷங்களில் காட்டி அளிக்கும் வேதாந்த கருத்துகளை புகுத்தவோ அல்லது வேதாந்த ஸம்ப்ரதாயத்தை ஸ்ரீவித்யா ஸம்ப்ரதாயத்துடன் தொடர்பு படுத்துவதோ ஸ்ரீவித்யைக்கு செய்யும் பெரிய துரோகம். ஸ்ரீவித்யா ஸம்ப்ரதாயத்தை நன்கு உணராததாலேயே அப்படி சிலர் செய்ய முற்பட்டுள்ளனர். தெரிந்தும் வேண்டுமென்று செய்பவர்கள் பாவிகள். ஸ்ரீவித்யா கல்ப விருக்ஷத்தில் தோன்றிய புல்லுருவிகள். ஸ்ரீவித்யா ஸம்ப்ரதாயத்தை மகான்கள் மிகமிக குப்தமாக போற்றி காப்பாற்றி வந்துள்ளனர். அதன் ரஹஸ்யத்தை நன்கு உணர்ந்து அனுஷ்டானத்தில் செயல்படும் குரு பரம்பரையின் ஸம்ப்ரதாயமே இங்கு குறிக்கப்பட்டுள்ளது.

சிற்சில சமயம் தன் மனம்போனபடி சாஸ்திரத்தை சுய நலத்துக்காக திரித்துக் கூறும் குருக்கள் அம்பாளையே விலைக்கு விற்கும் அளவிற்கு க்ஷுத்ரமாக நடக்க ஆரம்பிக்கும்கால் ஈச்வரனே ஸ்ரீகுருவாக ஆவிர்ப்பவித்து திவ்ய பரம்பரையை ஏற்படுத்த நேருகிறது. எல்லாபரம்பரைகளுமே ஈச்வரனால் ஏற்படுத்தப்பட்டவைதான். ஆகிலும் சில தலைமுறைகளுக்குப் பால் அவன் ஏற்படுத்திய சித்தாந்தத்தின் கொள்கைகளின் விளக்கத்தை சரிவர பெறாத காரணங்களினால், அஹங்காரம், கர்வம், வரட்டுகவுரவம், பொறாமை முதலிய மனோதோஷங்களால் பிடிக்கப்பட்டவர்கள் தானும் குருவாக வேண்டும் என்ற துடிக்கும் உள்ளக்கிளர்ச்சியால் குரு பீடத்தை ஏறி மனம் போனபடி சாஸ்த்ரத்தை விளக்க நேரிடுவதாலும் தலைமையனுக்கு உபாருவாயன் கண்டப்ரசண்டன் என்று சில ஸாதுக்களால் அவன் கூற்று சாஸ்த்ரியமாகக் கருதப்பட்டு வந்து விடுவதாலும் ஈச்வர ஆப்தமான ஸம்ப்ரதாயம் சிதைந்து ஸந்தர்ப்ப வாதிகளின் ஸம்ப்ரதாயமாக மாறிவிடும் அபாயம் உண்டு. அதுகொண்டுதான் ஸம்ப்ரதாய சுத்தியுடன் விளங்கும் மந்த்ரம் ஸர்வ ஸித்திகளையும் அளிக்கிறது என்கிறார் ஸூத்ரகாரர். ஸமயம் என்றாலே கட்டுப்



பாடு ஸம்பரதாயம் என்று பொருள். மார்கம் என்றால் வழி. அது கொண்டே ஸ்ரீ வித்யா ஸம்ப்ரதாயத்தில் விளங்குபவர்களை ஸமயிகள் மார்கஸ்தர்கள் என்று பரிபாஷையாக கூறுவதுண்டு. இதை மறந்து தக்ஷிணாசாரம் ஸமயாசாரம் வாமாசாரம் என்றெல்லாம் சில க்ரந்தங்களில் கூறப்பட்டிருப்பது அதை எழுதினவர்கள் ஸ்ரீ வித்யா ஸம்ப்ரதாயத்தை நன்கு உணராதவர்கள் அல்லது உணர்ந்தும் தன் விருப்பு வெறுப்பு காரணமாக சாஸ்த்ரத்தை தன்னிச்சைப்படி விளக்க முயன்றவர்கள் என்று தான் கருதநேரிடும்.

(ஈவ) பாவத்தைப் பற்றி விவரிக்குமிடத்து பாவம் மூன்று வகை திவ்ய பாவம் வீரபாவம் பசுபாவம் என்று தந்த்ரங்களில் விஸ்தாரமாக கூறப்பட்டுள்ளது. பாவம் என்பது அநுபவரூபம். இந்த மூன்று பாவங்களும் ஸ்ரீ வித்யா சாஸ்த்ரத்தில் அங்கீகரிக்கப்பட்டவை. பசுபாவம் என்றால் ஸ்ரீ வித்யா சாஸ்த்ர அனுஷ்டானத்துக்கு பாஹ்யமென்றும் நிக்ருஷ்டம் அல்லது தாழ்ந்தது என்றும் ஆகையால் தன் பாவத்தை பசு பாவத்திலிருந்து வேறுபட்டதாக காட்டிக் கொள்ள முயற்சிக்கும் சிலர் சாஸ்த்ரீய அனுஷ்டானங்களை தாறுமாறாக புரிந்து கொண்டு கடைபிடித்து வருகின்றனர். உண்மையில் தன் ஜீவபாவத்தை புணர்ந்து அதுடன் அனுஷ்டானம் செய்யும் ஒவ்வொருவருமே பசுபாவத்தில் அனுஷ்டானம் செய்பவர்கள்தான். ஆரம்பகாலத்தில் பெரும்பாலோர் இந்தபாவத்திலிருந்துதான் சாஸ்த்ரீய அனுஷ்டானத்தை செய்ய வேண்டியிருக்கும். அதில் தவறு ஒன்றுமில்லை. வீரபாவத்திற்கும் திவ்யபாவத்திற்கும் வெளித்தோற்றத்தில் தான் சிறிது வித்யாஸம். இருவருமே ஜீவபாவமற்றவர்கள். இங்கு கூறுவது புத்தி அளவில் அஹம்ப்ரஹ்மாஸ்மி என்றோ சிவோஹம் என்றோ மெஷின் மாதிரி கூறிக் கொண்டிருப்பதை ஒட்டி அல்ல, திவ்யபாவத்தில் இருப்பவர்கள் தான் பெற்ற அநுபவத்தை சாஸ்த்ர த்ருஷ்டியில் விளக்கியும் தான் எந்த நிலையில் அந்த விளக்கங்களை பெற்றார்களோ அந்த நிலையை ஒட்டி குரு பரம்பரையை அமைத்து உபதேசிக்க முற்படுவர். அதனால் அவர்கள் ஸ்வதந்த்ரமாக பரம்பரையை ஏற்படுத்தினர் என்று பொருள் அல்ல. அவர்கள் ஏற்கனவே சுத்தமான சாஸ்த்ரீயமான பரம்பரையில் வந்து அதன்படி அனுஷ்டானங்களை செய்து திவ்யமான நிலையை திவ்ய பாவத்தை அடைந்தவர்கள். அவர்கள் ஏற்படுத்திய பரம்பரையில் ஓரிரு தலைமுறைகட்கு திவ்ய பரம்பரையை குறிக்கும் ஸ்ரீ நாதர்கள் இருப்பது இயற்கையே இது அந்த பரம்பரையின் இரட்டிப்பான பாக்யம், குறுகிய

ப்ருஹ என்ற தாதுவிற்கு விரிதல் என்று பொருள். அகண்டமாக தேச கால வடிவாக விரிந்து கிடக்கும் பிரம்மத்தின் ரூபமே ஆனந்தமாகும். அந்த நிலையிலிருந்து தன்னை சங்கோசப்படுத்திக் கொண்டு ஸங்கோசத்தினால் ஏற்படும் தபஸ்ஸின் பயனாக மீண்டும் தன் ஆனந்த ஸ்வரூபத்தை அடைவதே லக்ஷ்யம். அந்த ஆனந்தம் தேகத்தில் மறைந்து இருக்கிறது. அதை வெளிப்படுத்த செய்யப்படுவதே மகா சக்தியைக் குறித்து செய்யப்படும் பஞ்ச மகாரங்களுடன் கூடிய மஹா சக்தி யஜனம்.

(தொடரும்)

---

# பரசுராம கல்பஸூத்ர விவரணம்

## 12

(ஸ்ரீ யக்ஞேச பட்டாரகன்)

१०. विश्वासभूयिष्ठं प्रामाण्यम्

விச்வாஸ பூயிஷ்டம் ப்ராமாண்யம்.

மா என்ற தாதுவிற்கு அளவு என்று பொருள். இதிலிருந்து மாணம் = அளவு என்ற சொல் ஏற்பட்டது. ப்ர என்ற உபஸர்க்கம் சேர்ந்து ப்ரமாணம் என்றாகிறது. ப்ரமாணமாயிருத்தல் என்ற அர்த்தத்தில் ப்ராமாண்யம் என்று உபயோகிக்கப்படுகிறது. முன் ஸூத்ரத்தில் விவரித்த விச்வாசத்தை அடிப்படையாகக் கொண்டது ப்ராமாண்யம் என்பது. ப்ரத்யக்ஷம் அனுமானம் உபமானம் சப்தம் என்று முன் விளக்கப்பட்ட ப்ரமாணங்களில் ப்ரத்யக்ஷம் அனுமானம் உபமானம் இவைகளில் ப்ரத்யக்ஷம் முதலாக இருந்தாலும் ப்ரத்யக்ஷம் என்பது மிக அல்பமாக இருப்பதாலும் அப்ரத்யக்ஷம் அதிகமாக இருப்பதாலும் ப்ரமாணங்களில் முதன்மையான ப்ரத்யக்ஷம் குறைவானதாக இருப்பதாலும் அதிகமாகவும் நம்பிக்கை என்ற விச்வாசத்தைக் கொண்டு தான் நாம் வாழ்க்கையை நடத்த வேண்டி



இருக்கிறது. சப்தம் என்ற ஆப்தோபதேசரூபமான வேதஆகமங்கள் நம்முடைய ஸ்தூலமான பௌதிகமான இந்திரியங்களுக்கு விஷயமாகாவிடினும் மஹரிஷிகளின் ஆத்யாத்மிகமான திவ்ய சக்ஷுஸ்ஸால் கண்டு தெளிந்தவையே. ஆயினும் ஆப்தர்களின் வாக்கில் நாம் விச்வாசம் கொண்டாலன்றி அவைகளை ப்ரமாணமாக ஏற்க முடியாது. அது கொண்டே ப்ராமாண்யம் என்பது விச்வாசத்தை அடிப்படையாகக் கொண்டது என்கிறார். இந்த ஸூத்திரத்தில், தர்மம் அதர்மம் என்பவை பகுத்தறிவை வைத்து நிர்மாணிக்கப்பட வேண்டியவையல்ல. கோ தர்ம: கோ அதர்மேதி சவயோப்யத்ர மோஹிதா: என்கிறது கீதை.

அது போலவே மந்த்ரங்கள் மந்த்ரங்களின் சக்தி மந்த்ரப்ரதிபாதிதமான தேவதைகள் எல்லாம் அவைகளை ஸாக்ஷாத்கரித்து உபதேசித்த மஹரிஷிகளான மஹர்ஷிகளின் வாக்கில் விச்வாசம் (நம்பிக்கை) வைத்து அனுஷ்டானம் செய்வது மூலம் நம்முடைய அனுபவத்துக்கு உட்பட்டவைகளாகின்றன. ஆகையால் ஸ்ரீ குருவின் வாக்கை வேதவாக்காகக் கொண்டு அனுஷ்டானம் செய்பவர்களுக்கு நம்பிக்கை என்ற விச்வாசமே ப்ரமாணமாகும். அதன்படி நடந்து அவர்கள் ஸர்வ ஸித்திகளையுமடைவர்.

११. गुरुमन्त्रदेवताऽऽत्म मनः पवनानां ऐक्यविस्फालनात् अन्तरात्मवित्तिः ।

குரு மந்த்ரதேவதா ஆத்மமன: பவனானாம் ஐக்ய விஸ்பாலனாத் அந்தராத்ம வித்தி:—

ஐம்பத்தொரு மாத்ருகாக்ஷரங்களிலிருந்து எல்லா மந்த்ரங்களும் உருவானவை. மந்த்ரங்கள் என்பவை தேவதைகளின் ஸூக்ஷ்ம ரூபங்களே. அவைகளை உபதேசிப்பவரே குரு. த்யான ச்லோகத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டுள்ள ஸித்தபுருஷர்கள் ஆத்யாத்மத்தில் தரிசித்த பல்வேறு உருவங்களே தேவதையின் ஸ்வரூபங்கள். ஸாதகனின் ஆத்மாவே மந்த்ர தேவதைகளின் ஆவிர்பாவத்திற்கு இன்றியமையாத ஆதாரம். குருமந்த்ர தேவதா ஆத்மா இவைகளை மனதினால் உணருகிறோம். மனம் ஏகாக்ரமாக இருந்தாலொழிய இது முடியாது. பவனம் என்ற ப்ராணனைக் கொண்டு மனதையும் மனதினால் ப்ராணனையும் ஸ்திரப்படுத்த முடியும். ஆகையினால் குரு மந்த்ர தேவதா ஆத்மா மனம் ப்ராணன் இவைகளை நன்கு உணர்ந்து ஒவ்வொன்றிற்குமுள்ள தொடர்பை உணர்ந்து இவை எல்லாம் ஒரே வஸ்துவின் விகாஸமே இவைகளில் ஒரு ஒற்றுமையுண்டு. இந்த ஒற்றுமைய

எவ்வளவுக்கெவ்வளவு அனுபவரூபமாக உணரமுடிகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அந்தராத்மாவை ஒருவாறு உணரமுடியும்.

ஆத்மா அந்தராத்மா க்ஞானாத்மா பரமாத்மா என்று நான்கு விதமாக ஆத்மா விளங்குகிறது. இந்த நாலுவித ஆத்மாக்களை நான்கு பக்கத்திலும் கொண்டு சிதக்னி குண்டம் விவரிக்கப் பட்டுள்ளது. ஆத்மாவே உயிர். அந்த: உள்ளே உள்ள ஆத்மா அந்தராத்மா. இதற்குமாறாக வெளியில் இருந்து எல்லாவற்றையும் நடத்திச் செல்லும் ஆத்மாவை பரமாத்மா என்கிறோம். ஸ்தூல ஸூக்ஷ்மகாரண சரீர கடகங்களான தத்வங்களை கொண்டு அந்தக் கரணங்களுக்கு ஆதாரமாக இருப்பது ஆத்மா இதை அந்த: உள்ளே உள்ள ஆத்மா என்னும் பொருளில் அந்தராத்மாவின் விளக்கம். ஸமஷ்டியாகவுள்ளது பரமாத்மா, உள்வெளி என்ற பேதமற்று கேவலம் க்ஞான ஸ்வரூபமாகவுள்ளதே க்ஞானாத்மா. ப்ராமயன் ஸர்வபூதானி ஹ்ருத்தேசே அர்ஜுன திஷ்டதி என்றபடி ஹ்ருத்ஸ்தானத்தில் அமர்ந்து செயல்படுவதே அந்தராத்மா. இந்த அந்தராத்மாவையே மனச்சாட்சி என்று ஸாக்ஷிரூபமாகவுள்ள ஆத்மாவை குறிக்கிறோம். இந்த அந்தராத்மா எல்லோருள்ளேயும் எப்பொழுதும் இருந்த போதிலும் இது உணரப்படுவதில்லை. மேற்சொன்னபடி குரு மந்த்ர தேவதா ஆத்ம மன: பவனங்களை ஒன்றாக பாவனை செய்யச் செய்ய அந்தராத்மாவின் பூரண விளக்கம் ஏற்படும். மனதினால் ப்ராணனும் ப்ராணனால் மனமும் ஸ்திரத் தன்மையை அடைய முடியும். மனதினால் நினைத்த மாத்திரம் ப்ராணனுடைய கதியாகிற உச்வாஸ நிச்வாசத்தில் ஒரு மாறுதல் உடனே ஏற்படுகிறது. இது போலவே ப்ராணனை ப்ராணாயாமாதிகளால் ஸ்த்திரப் படுத்த முடியும். பிறகு குரு மந்த்ர தேவதா ஆத்மாவினுடைய ஐக்யத்தை உணர வேண்டும்.

ஸ்ரீ குரு, மந்த்ரம், தேவதா, ஆத்மா, மனம், சுவாஸம் அல்லது பிராணன் இவற்றை ஒன்றாகவே உணர உணர தன்னுடைய அந்தராத்மாவை நன்றாக ஒருவன் உணரலாம் என்று கூறினோம், ஸ்ரீ வித்யா சாஸ்திரத்தில் ஸ்ரீ குரு சாக்ஷாத் காமேச்வராம்சமாகவே அல்லது காமேச்வராவதாரமாகவே கருதப் படுகிறார். அவர் அந்த நிலையில் இருந்து கொண்டு ஸ்வாத்மாபின்னமான தேவதையான ஸ்ரீ லலிதையின் ஸூக்ஷ்ம ரூபமாகக் கருதப்படும் ஸ்ரீ வித்யா மூல மந்த்ர வித்யையை தக்க சிஷ்யனுக்கு சாக்தி சாம்பவீ தீக்ஷைமூலம் அவனது பாபங்களைப் போக்கி அவனுக்கு புண்ய பாபமற்ற சாம்பவ ஸ்வரூபத்தைக்



கொடுத்து அவனது ஆத்மாவில் விதைத்து ப்ராணாயாம, ப்ரத்யாஹார தாரணா நிதித்யாஸன ஸமாதியாகிய யோகங்களை உள்ளடக்கிய நித்யானுஷ்டானங்கள் மூலம் வளர வைத்து சிஷ்யனுக்கு மேற்சொன்ன குரு மந்த்ர தேவதா ஆத்ம மன: பவனங்களின் ஐக்யானு ஸந்தானம் வரும்படி கருணை புரிகிறார். இந்த ஐக்யானு ஸந்தானம் வருவதற்கான தீவிரத்தன்மையைப் பொறுத்திருக்கிறது, ஸாதகன் தன் அந்தராத்மாவை உணருவது. இது கொண்டே ஸ்ரீ குருவை அவரும் நம் போன்று ஸ்தூலமாகக் காட்சியளிக்கும் ஒரு மனிதர் தானே என்று நினைப்பதும், மந்த்ரங்கள் என்பவை வெறும் சப்தங்கள் தானே என்று நினைப்பதும் விக்ரஹங்கள் அல்லது யந்த்ரங்கள் ஸாதாரண உலோகப் பொருள்கள் தானே என்று நினைப்பதும் அப்படி நினைத்தால் ஸித்தி பெறுவது முடியாத காரியம் என்று சாஸ்திரங்கள் பறை சாற்றுகின்றன.

(தொடரும்)

---

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம விவரணம்

## 22

(யக்ஞேச பட்டாரகன)

श्रीमद्वाग्भवकूटैक स्वरूप मुख पंकजा ॥ ८५ ॥

कण्ठाधः कटिपर्यन्त मध्य कूट स्वरूपिणी ॥ ८६ ॥

शक्तिकूटैकतापन्न कट्यधो भाग धारिणी ॥ ८७ ॥

ஸ்ரீ மத்வாக்பவ கூடைக ஸ்வரூபமுக பங்கஜா |
கண்டாத: கடிபர்யந்த மத்ய கூட ஸ்வரூபிணீ |
சக்தி கூடைகதாபன்ன கட்யதோ பாக தாரிணீ |

பரதேவதைக்கு ஸ்தூல ஸூக்ஷ்ம வாஸனா மயமான மூன்று சரீரங்களைத்தந்த்ர சாஸ்திரங்கள் விவரிக்கின்றன. நாம்த்யானம் செய்வதற்காக த்யான ஸ்லோகத்தில் விவரிக்கப்பட்டிருப்பது ஸ்தூலரூபம். மந்த்ராக்ஷரங்களின் தொகுதியே ஸூக்ஷ்மரூபம். அவயங்கள், ஆயுதங்கள், ஆபரணங்கள் வாஹனங்கள் இவற்றின் வாஸனாமயமான தாத்விக அர்த்தங்களைக்கொண்டது பரமானு

# பரசுராம கல்ப ஸூத்ர விவரணம்—13

(ஸ்ரீ யக்ஞேச பட்டாரகன்)

आनन्दं ब्रह्मणो रूपं तच्च देहे
व्यवस्थितं तस्याभिव्यञ्जकाः
पञ्चमकाराः तैरर्चनं गुप्त्या
प्राकट्यान्निरयः ॥ १२ ॥

ஆனந்தம்ப்ரஹ்மணோரூபம் தச்ச தேஹே
வ்யவஸ்த்திதம் தஸ்யா பிவ்ய ஞ்ஜகா:
பஞ்ச மகாரா: ஸ்தைரர்ச்சனம் குப்த்யா
ப்ராகட்யாந் நிரய: ॥ 12 ॥

அன்னமய ப்ராணமய மனோமய விக்ஞானமய ஆனந்தமயமாக
ப்ரம்மம் தைத்திரீயகாரண்யகத்தில் விளக்கப்பட்டிருப்பினும்
ஆனந்தமே அதன் ஸ்வரூபம் என்பது தெளிவு. ஸ்ருஷ்டிக்கு
முன் வ்யக்தமில்லாத அஸத் ஆக இருந்து ஸ்ருஷ்டிக்குப் பிறகு
வ்யக்தமான ஸத்தாக விளங்கும் ப்ரம்மம் ரஸோவைஸ: என்றும்
ரஸம் ஹ்யேவ அயம் லப்த்வா ஆனந்திபவதி என்றும் ஆனந்தோ
ப்ரம்மேதி வ்யஜானாத் ஆனந்தாத்யேவ கல்விமானி பூதானி
ஜாயந்தே ஆனந்தேன ஜாதானி ஜீவந்தி ஆனந்தம் ப்ரயந்த்யபி,
ஸம் விசந்தி என்று கடைசியாகவும் கூறப்படிருப்பதால்
ஆனந்தமே ப்ரம்மத்தின் ஸ்வரூபம். க்ஞானரூபமான சித்ரூப
மான ஆத்மா எங்கும் நிறைந்திருக்கிறதோ அது போல் ஆனந்த
ரூபமானது எங்குமே நிறைந்திருக்கிறது. ஐக்யம் முதலிய
ஸாதனங்களால் அறிவுக்கு விஷயமாக அனுபவிக்கப் படுகிறது.
ஸாதனமில்லாத ஸமயம் அனுபவ கோசரமாகாமல் எங்கும்
வ்யாபித்துள்ளது. அந்த ஆனந்தரூபம் க்ஷணிகமோ அநித்யமோ
அல்ல. ப்ரத்யபிக்ஞையைக் கொண்டு ஸுஷுப்த்தியில் என்றுமே
விளங்காமலிருந்தும் ஸதஸத்விலக்ஷணமான ப்ரம்மம் இருந்தது
என்று சொல்வது போல் லயமடைந்த நிலையில் ஆனந்தம் இருக்
கிறது என்று சொல்வதில் எந்தவித ஆக்ஷேபமும் இருக்க முடி
யாது. ஆனந்தரூபமான ப்ரம்மத்தின் விளக்கமே ஸ்ருஷ்டி.
சைதன்யத்தை அல்லது சித்தை அதிஷ்டானமாகக் கொண்டு

ஆனந்த ரூபம் விளங்குகிறது. ஸ்ருஷ்டி நித்யம். மந்த்ராதிகளால்
உபாஸித்து பலனடையக் காரணமாயுள்ள தேவதை முதலிய
ஸ்ருஷ்டி ஸ்வரூபங்களும் நித்யமே. ப்ரளயத்தில் காரணமான
ஆனந்தரூபத்திலேயே ஸ்ருஷ்டிக்கு லயம் ஏற்படுகிறது. ஸ்ருஷ்டி
என்பது லயத்திலிருந்து விளக்கத்துக்கு வருவதே. புருஷ என்று
குறிக்கப்பட்ட பூர்ண சக்தியாக உள்ள ஆத்மரூபமான ப்ரம்மம்
சிவ சக்தி ரூபமான பதி பத்னிகளாகி உலக ஸ்ருஷ்டிக்கு காரண
மாகிறது.

ஸைஹதாவானாஸ யதாஸ்த்ரீபுமாம்ஸௌ ஸம் பரிஷ்வக்
தௌ ஸ இமமேவாத்மானம் த்வேதா பாதயத்தத: பதிச்ச பத்னீ
சாபவதாம் என்ற ப்ரஹதாரண்யகவாக்கியம் இங்கு கவனிக்கத்
தக்கது. கடல் தானே கடலாகவும் அலைகளாகவும் இருப்பது
போல் ப்ரம்மம் ஆனந்தரூபமான தானாகவும் அலைகள் போன்ற
ப்ரம்மாண்டாதி ஸ்ருஷ்டிரூபமாகவும் விளங்குகிறது. ஆனந்தமே
ஸ்ருஷ்டிக்கு காரணமாக விளங்குகிறது. ஸ்ருஷ்டி ஸ்வரூபானந்த
அனுபவத்திற்கே என்று விளங்குகிறது. கார்ய கார்ணபாவத்தை
யனுஸரித்து ஆனந்தத்திலிருந்து வந்த ஸ்ருஷ்டி ஆனந்த ரூப
மாகத்தான் இருக்க முடியும். ஒவ்வொருவருடைய தேஹத்
திலும் ஆனந்தரூபமான ப்ரம்மம் விளங்கிக் கொண்டிருக்கிறது.
இருப்பினும் அந்த ஆனந்த ஸ்வரூபம் அனுபவ கோசரமாவ
தில்லையே என்று மனதிற் கொண்டு தஸ்ய அபிவ்யஞ்சகா: 'பஞ்ச
மகாரா:' என்கிறார் ஸூத்ரகாரர். அபிவ்யஞ்சகம் என்றால் வெளிப்
படுத்துவது, மறைந்திருப்பதை வெளிப்படுத்துவது. அனுபவ
கோசரமாக ஆக்குவது. ம என்ற எழுத்தில் ஆரம்பிக்கும் ஐந்து
யாகத்ரவ்யங்களுக்கு பஞ்சமகாரங்கள் என்று பெயர். உபாஸனை
யின் பலத்தால் மறைந்திருக்கும் ஆனந்த அனுபவத்தை பெறு
வதே ஸ்ரீவித்யானுஷ்டானத்தின் முக்கிய இலக்ஷ்யம். அளவுக்குட்
பட்ட ஆற்றலுடைய இந்திரியங்கள் மூலம் பெறப்படும் அனுபவ
மும் பரிச்சின்னமாகத்தான் இருக்கும். ஆகையால் த்ரவ்யங்
களின் உபயோகத்தால் ஏற்படும் விஷயானந்த ரூபமான
ஆனந்தத்தையல்ல இங்கு குறிப்பிடுவது. அகண்டமான அபரிச்
சின்னமான ஆனந்தானுபவத்தை. அது ஆனந்த ரூபிணியான
மஹாசக்தியின் உபாஸனையினாலேயே ஸாத்யம் என்று ப்ரம்ம
வித்யையில் தேர்ச்சி பெற்றவர்கட்கு விதிக்கப்படுவதே ஆனந்த
வித்யையான ஸ்ரீ வித்யை.

கந்த புஷ்ப தூப தீப நைவேத்யம் என்ற பஞ்சோபசாரம்
இல்லாத எந்த பூஜையுமே வீண் என்கிறது சாஸ்திரம். இந்த

८४ हरनेत्राग्नि संदग्ध कामसंजीवनौषधिः

ஹரநேத்ராக்னி ஸந்தக்த காமஸஞ்ஜீவனௌஷதி:

சிவசக்திகளின் ஐக்யத்தாலேயே ஸ்ருஷ்டி இனிது நடக்கிறது. சிவசக்திகளின் பிரிவு ஸ்ருஷ்டியை குலைத்துவிடும். சக்தியை விட்டுப் பிரிந்து ஈச்வரன் தபஸ் செய்து வரும் பொழுது சிவசக்தி ஸாமரஸ்யத்தை விரும்பி தேவர்களால் ஏவப்பட்ட காமதேவன் ஈச்வரனிடத்தில் தன் சேவையைக் காட்ட ஹரனுடைய நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய அக்னியால் காமதகனம் ஏற்படுகிறது. காமதகனத்தால் ஸ்ருஷ்டியே அழிந்து விடும் என்று அஞ்சிபரதேவதை அவனுக்கு உயிர் ஊட்டும் ஸஞ்சீவினியாக இருந்து அவனை அனங்கனாகவே தன் கண்ணில் நித்யவாஸம் செய்யுமிடம் அளிக்கிறாள். இந்த நிலையை வருணிக்கும் காளிதாஸன் ஹரநேத்ர ஜன்மா என்று சொல்லாமல் பவ நேத்ர ஜன்மா என்று அக்னியை குறிப்பிட்டு அதன் மூலம் காமன் சாம்பலாவதை வருணிப்பது அவன் மீண்டும் உயிர் பெறப்போவதைக் குறிப்பிடவே. காமன் உயிர்பெற்று எழுவது ஸ்ருஷ்டியை இனிது நடத்தவே. ஸ்ரீ தேவியும் காமேச்வரியாக காமேச்வரனுடன் கூடி தான் ஆவிர்பவித்ததின் பூரண பயனை உலகுக்கு வழங்குகிறாள்.

(தொடரும்)

—O—O—

# श्री परशुराम कल्पसूत्र विवरणम्

# ஸ்ரீ பரசுராம கல்பஸூத்ர விவரணம்

(ஸ்ரீ யக்ஞேசன்)

ஸம்ப்ரதாயம் விச்வாஸம் இவற்றால் ஸர்வஸித்திகளும் ஏற்படுகின்றன. ஸம்ப்ரதாயத்தின் முக்கியத் தன்மையைப் பற்றியும் பாவ (भाव) ங்களின் தன்மையும் விளக்கப்பட்டது. விச்வாஸத்தின் தன்மையைப் பற்றி இங்கு கூறப்படுகிறது.

விச்வாஸம் என்றால் நம்பிக்கை. ச்ரத்தையும் விச்வாஸமே. மந்த்ரம் தேவதை இவற்றில் பூரண விச்வாஸம் தேவை. ஸம்ச





யாத்மா விநச்யதி என்கிறார் கீதாசார்யன். ச்ரத்தை தேவதையாகவே வருணிக்கப்படுகிறது. அதன் விளக்கத்துக்கு தைத்திரீய ஆரண்யகத்திலும் ஏனைய வேதபாகங்களிலும் பார்க்கவும். ச்ரத்தை தேவர்களுக்கெல்லாம் மேலாக உள்ளாள். ச்ரத்தை அக்னியை வளர்க்கிறாள். ச்ரத்தையினால் தான் எல்லாம். "யஜமானன் யக்ஞத்தின் ஆத்மா என்றால் ச்ரத்தை பத்னி" முதலிய கருத்துக்கள் ஆழ்ந்து நோக்கப்பட வேண்டியவை. எவனுக்கு எப்படி ச்ரத்தையோ அவன் அப்படியே ஆகிறான். ச்ரத்தை விச்வாஸம் நம்பிக்கையின் முக்கியத்துவத்தை பலர் அறிவதில்லை. அதை குருட்டு நம்பிக்கை என்று கேவலமாக எண்ணுகின்றனர்.

ராமகிருஷ்ணர் கூறியுள்ளது போல நம்பிக்கையில் குருட்டு நம்பிக்கை குருடில்லாத நம்பிக்கை என்று கிடையாது. இதற்கு மேல் புத்தியைக் கொண்டு அறியமுடியாது என்ற பிறகே நம்பிக்கை பிறக்கிறது. ப்ரத்யக்ஷம் அநுமானம் உபமானம் சப்தம் என்று நான்கு ப்ரமாணங்களை வைதிகர்களான நாம் அங்கீகரித்திருக்கிறோம். ப்ரத்யக்ஷம் என்பது நமது புலன்களுக்கு விஷயமாவது. அது மிகவும் அல்பம். அப்ரத்யக்ஷம் அனல்பம், அளவற்றது. எந்தப் புலன்களைக் கொண்டு விஷயங்களை ப்ரத்யக்ஷம் செய்கிறோமோ அந்த புலன்களே அப்ரத்யக்ஷம். புலன்களின் அதாவது இந்த்ரியங்களின் குறைபாடுகளால் ப்ரத்யக்ஷம் என்பது பாதிக்கப்படக் கூடும். மிக தூரத்தில் அல்லது மிக சமீபத்தில் இருப்பது கண்களுக்கு புலப்படுவதில்லை, மிக அதிகமான அல்லது மிக நுட்பமான சப்தம் காதுக்கு விஷயமாவதில்லை. ஆகையால் ப்ரத்யக்ஷத்தை ஆதாரமாகக் கொண்டு பல இடங்களில் விடாமல் தொடர்பு கொண்ட இரண்டில் ஒன்றைக் கண்டதும் மற்றதும் அங்கு இருக்க வேண்டும் என்று அநுமானிக்கிறோம். இரண்டுக்கும் உள்ள தொடர்பை வ்யாப்தி என்பர்.

புகையும் நெருப்பும் சேர்ந்திருப்பதை பல முறை பல இடங்களில் பார்த்து ஓரிடத்தில் புகையைக் கண்டவுடன் அங்கு நெருப்பு இருக்க வேண்டும் என்று அநுமானிக்கிறோம். இரண்டு பொருள்களுக்கு விடாமல் தொடர்பு இருப்பதை பல முறை கண்டு அவற்றில் ஒன்று மற்றொரு பொருளிடம் இருக்கும் பொழுது முன் கண்ட பொருளுக்கு ஸமமானது மற்றது என்பது உபமானம். அதற்கும் ஆதாரம் ப்ரத்யக்ஷமே. பசுவின் கழுத்தில் தொங்கும் சதையை எப்பொழுதும் பசுவிடம் கண்டு கவயம் என்ற மிருகத்திடமும் அந்த தொங்கும் சதையைக் கண்டு கவயம் என்பது கோவிற்கு ஸத்ருசம என்பது உபமானம். சப்தம் என்பது ஆப்தர்களின் வாக்கு. த்ரிகாலக்ஞர்களும் விருப்பு வெறுப்பு

அற்றவர்களும் தத்வத்ருஷ்டிகளுமான மஹர்ஷிகள் அகக் கண்ணால் ஸாக்ஷாத்காரம் செய்த மந்த்ர ரூபமான வாக்குகளான வேதங்களே இங்கு சப்தம் என்ற ப்ரமாணமாக கூறப்பட்டது. வேதங்களைப் போல் ஈச்வரப்ரோக்தமான ஈச்வர நிலையிலிருந்த ஸித்தர்களின் வாக்குகளே ஆகமம் அல்லது தந்த்ரங்கள். அவையும் சப்த ப்ரமாணத்தின் பின்வருபவையே.

ஆகையினால் தேவதைகளின் ஸ்தூல ரூபங்களிலும் ஸூக்ஷ்ம ரூபமான மந்த்ரங்களிலும் மந்த்ரங்களால் ப்ரதிபாதிக்கப்படும் தத்வார்த்தங்களிலும் விச்வாஸத்துடன் ச்ரத்தையுடன் முழு நம்பிக்கையுடன் உபாஸனை செய்பவனுக்கு ஸர்வ ஸித்திகளும் தானே கை கூடுகின்றன. மந்த்ரங்களின் உண்மையான ஸ்வரூபத்தை உபதேசிக்க ஸம்ப்ரதாயமும் உபதேசித்த மந்த்ரத்திலும் மந்த்ரார்த்தத்திலும் பூர்ண விச்வாஸமும் மிக மிகத் தேவை. இதன்றி யாராலோ கொணர்ந்து வரப்பட்டு யாராலோ அரைக்கப்பட்டு கொடுத்த மருந்தை யாருக்கோ கொடுத்தால் முடிவும் ஏதோ ஆவது போல் யாராலோ யாருக்கோ ஏதோ உபதேசிக்கப்பட்டால் முடிவும் ஏதோ தான் ஆகும். இதிலிருந்து உபதேசகனுடைய தகுதி மந்த்ர சக்தி மந்த்ர மந்த்ரார்த்தங்களில் அசைக்க முடியாத விச்வாஸம் என்ற சிஷ்யனுடைய தகுதி இவைகளைப் பொறுத்தே ஸர்வ ஸித்திகளும் ஏற்படும். சிஷ்யன் குருவின் [illegible]ங்களையும் அவர் ஸம்ப்ரதாயத்தையும் ஸ்ரீ குரு சிஷ்யனின் தகுதியையும் மந்த்ரத்தினிடமும் தன்னிடமும் அவனுக்கு இருக்கும் விச்வாஸத்தையும் ஆராய்ந்து ஸ்ரீ வித்யாநுஷ்டானத்தில் பங்கு கொள்ளும் பொழுது அதன் முடிவு இனிதாகவே இருக்கும். சங்கிதமின்றி பணத்திற்கும் புகழுக்கும் புலனுக்கும் அடிமையாகி பங்கு கொள்ளும் ஸ்ரீ வித்யா வியாபாரிகளுக்கு ஒரு வேளை அவர்கள் நினைத்தது கிடைக்கலாம். ஆனால் ஸர்வ ஸித்திகளும் எல்லாவற்றிற்கும் மேலான ஸ்வரூபஜ்ஞானமும் கிட்ட வாய்ப்பில்லை.

(தொடரும்)

---

## தக்ஷிண காளிகா

(ஸ்ரீ யக்ஞேசன்)

தக்ஷிண காளிகா என்றவுடன் தெற்கு முகம் பார்த்த காளி என்றோ தென்னாட்டு காளி யென்றோ சிலர் எண்ண நேரலாம். ஆம்னாயங்களில் உத்தராம்னாயத்திற்கு அதிதேவதை காளிகா தேவி. தக்ஷிணாவின் மந்த்ரங்களும் அந்த ஆம்னாயத்திலேயே





இருப்பன. வலதுகையால் பூஜை செய்யப்பட வேண்டியவள் தக்ஷிண காளிகா என்று சக்தியுபாஸனையை தூஷிக்கும் சில சக்தி தாஸர்கள் பாஷ்யம் எழுதத் தொடங்கினாலும் ஆச்சர்யம் இல்லை.

துரோணர் அஸ்த்ரவித்யையில் அளவற்ற ஆற்றல் கொண்டவர். அவர் குமாரன் அச்வத்தாமா பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் வில்வித்தை கற்றுக் கொடுத்த அந்த மகானிடம் தானும் அஸ்த்ர வித்யை பயிலத் தொடங்கினான். ஆனால் ஒரு சில பகுதியைக் கற்றவுடனேயே அந்த மகிழ்ச்சியில் தன்னை தன்னிகரற்ற வில்லாளியாகக் கருதி வெளியேறி விட்டான். அவனுவது தன்னுடைய அரைகுறை ஜ்ஞானத்தை அபாண்டவாஸ்த்ர ப்ரயோகம் செய்து பிறகு அதை உபஸம்ஹாரம் செய்ய ஸ்ரீ க்ருஷ்ணன் கூறும் பொழுது ஒருவாறு உணர்ந்தான். ஆனால் அவனையின்றி மார்தட்டும் நவீன உபாஸக மார்தாண்டர்கள் தங்களுடைய அரைகுறை ஸ்ரீ வித்யாஜ்ஞானத்தை உணர விரும்பார்கள் உணரவும் மாட்டார்கள்.

ஸ்ரீ வித்யை என்பது ப்ரம்மவித்யை ஸித்தித்த பிறகு அந்த ஸித்தித்தவனுக்காக மிகவும் குப்தமாக வேதங்களிலும் தந்த்ரங்களிலும் உபதேசிக்கப்படும் ஆனந்தவித்யை. ப்ரம்ம வித்யை சித்தினுடைய விலாசத்தை விளக்குகிறது. சித்தை பீடமாகக் கொண்டு சித்மூலமாகவே ஸ்புரணரூபமாக விளங்கும் ஆனந்த விலாஸத்தை வருணிப்பது ஸ்ரீ வித்யை. ஸ்ரீ என்றால் கலா. கலா என்றால் ஆனந்தம். காம கலா என்றால் காமேச்வரனின் ஆனந்தம் வெறும் கலா என்றால் கேவல அல்லது காரண ரூபமான ஆனந்தம். வேதங்களில் சித்ரூபமான ப்ரம்மத்தை உபாஸிக்க பலவித்யைகள் உபதேசிக்கப்பட்டுள்ளன. சாந்தோக்யம் தைத்திரீயம் ப்ருஹதாரண்யகம் முதலிய உபநிஷத்துகளிலும் பலவித்யைகள் உபதேசிக்கப்பட்டுள்ளன. அதுபோல் தந்த்ரங்களிலும் பல வித்யைகள் உபதேசிக்கப்பட்டுள்ளன. முக்கியமான எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்ட ப்ரஸித்தமான பத்து உபநிஷத்துக்களையும் சேர்த்து தசோபநிஷத்துகள் என்பது போல் சித்ரூபமான ப்ரமத்தை உபாஸிக்க பத்து வித்யைகள் தசமகா வித்யைகள் என்று தந்த்ரங்களில் உபதேசிக்கப்பட்டுள்ளன. தந்த்ராகமங்களில் இந்த பத்துக்கு மேலும் வித்யைகள் இருக்கலாம். ஆயினும் இவை முக்கியமாக ப்ரம்மத்தின் வெவ்வேறான பத்து அம்சங்களை விவரித்தாலும் ஒவ்வொரு வித்யையும் பூர்ண ப்ரம்ம நிலையில் ஒவ்வொரு உபாஸகனை கொண்டு செல்லும் ஆற்றல் கொண்டவை. ஒவ்வொன்றுமே சிவசக்தி ஸ்வரூபமான ப்ரம்மநிலையை விளக்குவதே. இவைகளில் ஏதாவது

பஞ்சோபசாரத்திற்கும் பஞ்ச பூதகுணங்களுக்கும் ஒரு சம்பந்தம் உண்டு. பரதேவதை படைத்த இந்த போகாயதனமான உலகை அவளுக்கு அர்பணிப்பதே பூஜை. உலகை எப்படி அர்பணிப்பது? உலகம் பாஞ்ச பௌதிகம். ஆகையால் பஞ்ச பூதங்களின் குணங்களைக் கொண்ட பஞ்ச உபசாரங்களை ஸமர்பித்து உலகையே ஸமர்பித்ததாகக் கொள்கிறோம். இது ஸ்தூலப்ரபஞ்ச விஷயம். இதே காரண ப்ரபஞ்சத்தில் சித் அல்லது பரசித் ரூபமாக இருப்பதால் சித் அல்லது பரசித்தின் விளக்கத்திற்கு இன்றியமையாத பஞ்ச யாக திரவ்யங்களை கொண்டு ஸர்வ காரண ரூபிணியான மஹாசக்தி லலிதைக்கு செய்யும் திரவ்ய தியாக ரூபமான யாகமே ஸ்ரீ வித்யோ பாஸனையின் உட்கருத்து. பஞ்சோபசாரம் பாஞ்ச பௌதிகம் போன்று இந்த திரவ்ய உபயோகம் பஞ்ச பூதங்களின் காரண ரூபமான பஞ்ச ப்ரம்ம ஸ்வரூபம். பஞ்சோப சாரம் ஸர்வதேவதா விஷயம். ஸ்ரீ வித்யையில் விதிக்கப்பட்ட பஞ்சத்ரவ்ய யஜனம் பஞ்ச ப்ரம்ம ஸமஷ்டி ரூபிணியான மஹா சக்தி விஷயம். அவைகளைக் கொண்டு மஹா சக்தியையும் அவளுடைய ரச்மி (கிரணங்கள்) ரூபர்களான மற்ற தேவதைகளையும் மிகவும் குப்தமாக இரஹஸ்யமாக யஜனம் செய்வது அல்லது அர்ச்சிப்பது முக்திக்கு வழி வகுக்கும். ரஹோயாகம் ரஹஸ் தர்பணம் என்று பரதேவதையின் உபாஸனைக்கு பெயர். கௌலோதர்ம: பரமகஹன: யோகினாமப்ய கம்ய: என்று யோகிகளுக்கும் மிகவும் கடினமானது என்று உபாஸனாக்ரமம் கூறப்படுகிறது. சக்தி மேல் நடப்பதற்கு சமமான இந்த கார்யத்தில் உபயோகிக்கப்படும் திரவ்யங்கள் ஸாதகன் விழிப்புடன் இல்லாவிடில் அவனை படுகுழியில் தள்ளிவிடும். அது கொண்டே கடுமையான சோதனைகளுக்குப் பிறகு தகுதியை நிர்ணயித்தே க்ரமமாக தீக்ஷையளிக்கப்பட்டு ஸ்ரீ குருவின் மேற்பார்வையில் விருப்பு வெறுப்பின்றி ஸாதகன் ஸாதனை புரிந்து முன்னேற வேண்டும். தகுதியற்றவர்களுக்கு புத்தி பேதத்தை உண்டு பண்ணாமல் இருப்பதற்கும் அவர்கள் தங்களுக்கு தகுதியற்ற கார்யத்தை செய்யாமல் இருப்பதற்கும், அவர்கள் தங்களது அக்ஞானத்தால் யாகானுஷ்டானத்தை தூஷித்து பதிதர்களாக ஆக ஸாதகன் காரணமாகாமல் இருப்பதற்காகவும் ஸூத்ரகாரர் குப்த ஸாதனத்தை வலியுறுத்துகிறார். தன்னையுமறியாமல் ஸாதகன் தன்னுடைய காமக்ரோதலோப மோஹ மத மாத்ஸர்யங்களால் சாஸ்த்ரானுஷ்டானத்தை ப்ரகடனப் படுத்தினாலோ வெளிப்படையாக செய்தாலோ அவன் செய்கை மற்றவர்களை ப்ரஷ்டர்களாக ஆக்கக் கூடியதால் அந்த தோஷம் அவனையே சாரும். அதனால் அவன் நரகத்தையேயடைவான்.



முன்னால் முக்தி என்று கூறியிருப்பதால் முக்திக்குப் பதில் மேன்மேலும் பந்தனாக பலவாக ஆகுவான் என்று பொருள். இது கொண்டே சிஷ்டர்களான முன்னோர்கள் தங்களையும் தங்களது அனுஷ்டானத்தையும் பூரணமாக மறைத்துக் கொண்டே சென்று வந்திருக்கிறார்கள். "அந்த: சாக்தோ பஹி: சைவ: வ்யவஹாரேது வைஷ்ணவ:" என்ற வாக்யம் இப்படி தன்னை முழுமையாக மறைத்து சென்ற பெரியோர்களை மனதில் கொண்டே எழுந்தது.

(தொடரும்)

X—X

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம விவரணம்

## 23

(ஸ்ரீ யக்ஞேசன்)

### ௮௮. मूलमन्त्रात्मिका

மூலமந்த்ராத்மிகா

ஸ்ரீமத்வாக்பவகூட என்று ஆரம்பித்த மூன்று நாமக்களால் பரதேவதையின் ஸூக்ஷ்மரூபம் வருணிக்கப்பட்டது. ஸூக்ஷ்ம ரூபத்தை ஸூக்ஷ்மம் ஸூக்ஷ்மதரம் ஸூக்ஷ்மதமம் என்று மூன்றாக பிரிக்கலாம். மூன்று கூடங்களுடைய பஞ்சதசீ வித்யை ஸூக்ஷ்மம் என்றால் காமகலாக்ஷரம் ஸூக்ஷ்மதரம் என்றும் குண்டலினி ஸூக்ஷ்மதமம் என்றும் கொள்ளலாம். மூல மந்த்ர வடிவினள். மூன்று கூடங்களுடைய பஞ்சதசீவடிவினள் என்ற பொருள் முந்திய மூன்று நாமக்களாலேயே கூறப்பட்டு விட்ட படியால் தர்மாதி சதுர்வித புருஷார்த்தங்களுக்கு மூலமான மந்த்ர ரூபமான காம கலாக்ஷர வடிவினள் என்று இங்கு குறிக்கப் படுகிறது. இது ஸூக்ஷ்ம தரமான ரூபம்.

### ௮௯. मूल कूटत्रयकलेबरा

மூல கூடத்ரய கலேபரா.

கலேபரம் என்றால் சரீரம். கூடத்ரயம் வாக்பவ காமராஜ சக்தி என்ற மூன்று கூடங்கள். மூலமந்த்ரமான பஞ்சதசியின் மூன்று கூடங்களான சரீரத்தையுடையவள் என்ற ஸூக்ஷ்ம ரூப

கூறுகிறது. இது ஸாதகனுக்கு விதிக்கப்பட்ட ஒரு தர்மம் என்று கொண்டாலும் தவறில்லை. தர்சனம் என்றால் பார்த்தல் பார்க்க உதவுதல் என்று பொருள். பார்த்தல் என்றால் ஒரு குறிப்பிட்டு நிலையில் இருந்து நோக்குதல். பார்க்கும்பொழுது எந்த பக்கம் பார்க்கிறோமோ அந்த பக்கம் மாத்திரம் தான் நம் அனுபவ கோசரமாகும். ப்ரம்மத்தை எந்த பக்கமாக பார்த்தாலும் தவறில்லை. அப்படி பார்க்கும் நிலைகளை ஆறாக கொண்டு தந்த்ரங்கள் இஷ்டதர்சனங்கள் என்ற ஆறுதர்சனங்களை விவரிக்கின்றன. கணபதி ஸௌர்யன் ப்ரம்மா விஷ்ணு ருத்ரன் சக்தி என்று ஆறு விதத்தில் எந்த விதமாக வேண்டுமானாலும் ப்ரம்மத்தை நோக்கலாம். இதில் எந்த தர்சனத்தை வேண்டுமானாலும் ஒருவன் பின் பற்றலாம். முடிவில் அவன் அடைவது ப்ரம்ம அனுபவமே. ஆகையால் ஒரு தர்சனத்தை தான் பின் தொடரும் பொழுது மற்ற தர்சனத்தை நிந்திக்கக் கூடாது. ஸ்ரீ வித்யைக்கு ஆறு தர்சனங்களும் ஸோபானங்கள் (படிகள்) ஆனதால் இவைகளில் எந்த தர்சனத்தையும் நிந்திக்க கூடாது.

தசாவதாரத்தில் க்ருஷ்ணனைப் பார்த்து அவன் செய்ததாக தசாவதாரத்தை விவரிக்கும் சிலர் க்ருஷ்ணனுடைய இடத்தில் புத்தரை சேர்த்து தசாவதாரத்தை விளக்கலாயினர். உலகமே அவன் ஸ்வரூபம் என்ற நிலையில் எல்லாமே அவன் ஸ்வரூபமே. புத்தரும் அவன் ஸ்வரூபமே. அது வேறு, ஆனால் தசாவதாரத்தை விஷ்ணுவினுடைய அவதாரங்களாக விவரித்த புராணங்களின் கருத்து வேறு. இதை புரிந்து கொள்ளாமல் பௌத்தமான சிலதந்த்ரங்கள் இருப்பதால் புத்தரையும் உபாஸ்ய தேவதையாகக் கொண்டு ஷட்தர்சனங்களை பிற்காலத்தில் சிலர் தந்த்ர க்ரந்தங்களிலும் திரித்துக் கூறலாயினர். ஸ்ரீ வித்யா சாஸ்த்ர அடிப்படைக் கொள்கைக்கும் பௌத்த கொள்கைக்கும் எந்த ஸம்பந்தமுமில்லை. சில தந்த்ரானுஷ்டானங்கள் ஸமானமாக இருப்பதைக் கொண்டு பௌத்த தர்சனத்தை அங்கீகரிப்பதாக இருந்தால் அந்த அனுஷ்டானத்துக்கும் பௌத்த ஸித்தாந்திற்குமே எந்த ஸம்பந்தமுமில்லை. சிலர் நவ ஆவரணங்களில் ஜைனதர்சனம் ஸாங்க்யம் என் சார்வாக தர்சனம் இவற்றிற்கும் ஸ்தானங்களை கூறி எம்மதமும் ஸம்மதம் என்ற ஸாதாரண ஸித்தாந்தத்தை ஸ்ரீ வித்யை கூறுகிறது என்கின்றனர். இவர்கள் ஸ்ரீ வித்யையின் மூலஸ்வரூபத்தை நன்கு ஆராய்ந்து ஆழ்ந்து நோக்க வேண்டும்.

இது தவிர ஸாங்க்யம் யோகம் வ்யாகரணம் ந்யாயம் மீமாம்ஸை முதலிய தர்சனங்களை மனதிற்கொண்டு எந்த தர்சனத்



தையும் நிந்திக்கக்கூடாது. என்று ஸ்ரீ வித்யை கூறுகிறது என்கின்றன. இவைகள் தர்சனமாகக் கொள்ளப்படினும் இவை வேத அங்கங்கள். வேதத்திற்கு ஸமமாக ப்ரமாணக்ரந்தங்களாகக் கருதப்படும் தந்த்ர ஆகமங்களில் விதிக்கப்பட்ட தர்சனங்கள் வேறு. இவை வேறு. இங்கு ப்ரகரணவசத்தால் ஸ்ரீ வித்யைக்கு ஸோபானங்களான ஆறு தர்சனங்களில் எதை பின்பற்றினாலும் பூரண ப்ரம்ம நிலையை அடைந்து முக்தனாகி ஸ்ருஷ்டி பலபூதமான ஸ்புரண ரூபமான ஸ்வரூபானந்தத்தை அனுபவிக்க முடியும். ஆகையால் எந்த தர்சனத்தையும் நிந்திக்க வேண்டாம் என்று பாஸ்கரர் கூறுகிறார். மற்ற தர்சனங்களிலும் ஓரளவு குணங்கள் இருக்கலாம். ஆனால் அவை ப்ரம்ம ஸ்வரூப அனுபவத்திற்கு வழி வகுக்காது. மற்ற தர்சனங்களை நிந்திப்பதில் நமக்கு நன்மை பயக்கப் போவதில்லை. அவைகளின் ஸங்குசிதமான தன்மையை உணர்ந்து ஸ்ரீ வித்யைக்கு அங்கமான தர்சனங்களில் ஏதோ ஒன்றை பின்பற்றி பிரம்ம நிலையை அடைந்து ஸாதனையை ஒருவன் மேற்கொள்ள வேண்டும். (தொடரும்)

# KUNDALINI

Dr. B. Krishnamurthi M.A. Ph. D

An attempt based on experience is made here to unveil the secrets of Kundalini Yoga. The universe is eternally charged with Spiritnal elixiarne energy with which the five fold God in charge of creation preservation, modification veiling and total illumination is constantly operating under the command of the Mother of Mothers. Such a vast stuff of this energy is eternally and fully inter - spaced in the realm of space and time that it is impracticable to capsule this energy for different administrations. In order to commence the art and act of creation of the movable and the immovable the sentient and the non - sentient the creator was looking at askance as to how to discharge his duties preordained on him by his own Creatrix. When this thought took a wave form the lowest sub - divided particles of atom

குறிப்பிடப்பட்டதைப் போல, பிராணிகளின் அதிருஷ்ட காலம் சம்பவிக்கும் பொழுது பரமாத்மா தன்னை இரண்டு பாகங்களாகப் பிரித்துக் கொண்டு, ஸ்த்ரீ - புருஷ ரூபங்களான - பார்யா - பர்த்ருக்களில் விளங்குகிறது என்பது பொருள். இதனால் கார்ய காரணங்கள் இரண்டும் சிவசக்தி ரூபமென அறியலாம். இதுவே எல்லாவித ஸ்ருஷ்டிக்கும் மூலமாகிறது.

(தொடரும்)

★ ★ ★

# ஸ்ரீ பரசுராம கல்பஸூத்ர விரணம்

(ஸ்ரீ யக்ஞேசன்)

## १५. अरणं कस्यापि

அரணம் கஸ்யாபி

தன்னுடைய சாஸ்த்ர ஸித்தாந்தத்திற்கு விரோதமாக யார் சொன்னாலும் அதை பொருட் படுத்த வேண்டாம் என்று பொருள்.

ஒவ்வொரு தர்சனத்திற்கும் அடிப்படையான ஸித்தாந்தம் உண்டு. ஷட் தர்சனங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டு வாழ்வதையே உபாஸனையாக போதிக்கும் வைதிக மதத்தின் சரம பூமிகையாக விளங்கும் ஸ்ரீ வித்யா சாஸ்த்ரத்திற்கு இன்றியமையாத சில கொள்கைகள் உண்டு. வைதிக மார்கம் சிறுகிளைத்து பல்வேறு ஸமயங்களாக விளங்குவது போல் விருப்பு வெருப்பு அறை குறை சாஸ்த்ர க்ஞானம் முதலியவற்றினால் ஸ்ரீ வித்யா சாஸ்த்ர கொள்கைகளுக்கு விருத்தமான சில கொள்கைகள் சில தந்த்ரங்களில் இடம் பெற்று ஸ்ரீ வித்யையின் பெயரில் பிரசாரத்தில் உள்ளன; அவ்வித கொள்கைகள் எங்கு யாரால் கூறப்பட்டாலும் அதைப்பொருட் படுத்த வேண்டியதில்லை. சாஸ்த்ரீய க்ஞானத்துடன் ஸம்ப்ரதாய சுத்தியுடன் அனுஷ்டானம் செய்யும் பொழுது அதற்கு விரோதமாக பிரகஸ்பதியே வந்து யுக்தி வாதம் செய்தாலும் பொருட் படுத்த வேண்டியதில்லை. ஈச்வராதிகளின் அவதாரங்களின் பெயரால் சாஸ்த்ர விரோத கொள்கைகள் தான்தோன்றித் தனமாக பரப்பப்படும் பொழுது அதைப் பொருட் படுத்த வேண்டியதில்லை.



## १६. सच्छिष्ये रहस्यकथनम्

ஸச்சிஷ்யே ரஹஸ்ய கதனம்.

சாஸ்த்ர விரோதமாக யார் எதைக் கூறினாலும் பொருட் படுத்த வேண்டாம் என்று கூறப்பட்டது மேழுள்ள ஸூத்ரத்தில். ஸ்ரீ வித்யா சாஸ்த்ரம் ரஹஸ்யங்கள் நிறைந்தது. சாஸ்த்ர ஸித்தாந்தம் சில இடத்தில் வெளிப்படையாகவும் சில இடத்தில் குப்தமாகவும் விளக்கப் பட்டிருக்கிறது. ஸ்ரீ குருதேவர் கூறுவது போல் ப்ரகட, குப்த, குப்ததர, ஸம்ப்ரதாய, குலோத்தீர்ண நிகர்ப ரஹஸ்ய அதிரஹஸ்ய பராபர ரஹஸ்ய என்று ஒன்பது விதமான பொருளை விளக்குகிறது சாஸ்த்ரம். எல்லா ரஹஸ்யங்களையும் எல்லோருக்கும் சொல்லவும் முடியாது. தன்னுடைய ஸித்தாந்த ரஹஸ்யங்களை பலவித பரீக்ஷைகளுக்குப் பிறகு ஸச்சிஷ்யன் என்று தேர்ந்த சிஷ்யனுக்கு மாத்திரம் சொல்ல வேண்டியது. குலார்ணவம் முதலிய தந்த்ரங்களில் ஸச் சிஷ்ய லக்ஷணங்களும் அஸச் சிஷ்ய லக்ஷணங்களும் விவரமாக விளக்கப் பட்டுள்ளன. சுருக்கமாக கூறுமிடத்து அழகிய தோற்றம் ப்ரஸன்னமான முகம் உடல் உள்ளம் இரண்டிலும் தூய்மை ச்ரத்தை திருடமான மனது, பேராசையின்மை த்ருடமான உடல் சீர்தூக்கிப் பார்த்து எதையும் செய்யும், தன்மை புலனடக்கம், ஆஸ்திக்யம், குரு மந்த்ரம் தேவதை இவற்றில் த்ருடமான பக்தி எவனிடம் காணப்படுகின்றதோ அவனே ஸச் சிஷ்யன். அப்படிப் பட்ட சிஷ்யனுக்கு சாஸ்த்ர ரஹஸ்யங்களைக் கூறலாம். ப்ரம்ம வித்யையே மிக வருத்தத்துடன் ப்ரம்ம நிஷ்டனை ப்ராம்மணனை சரண் அடைந்து என்னை எப்படியாவது நீ காப்பாற்ற வேண்டும் என்றதாம். அதனாலேயே சாஸ்த்ர ரஹஸ்யங்களை குலஸ்த்ரீயை காப்பது போல் பெரியோர்கள் மறைத்து காத்து வந்துள்ளனர். சொல்பவர் கேற்பவர் இவர்களிடம் உள்ள தோஷங்கள் சாஸ்த்திரத்தினிடம் வரக்கூடாதே என்ற சீரிய கருத்துடனேயே ரஹஸ்யங்களை மறைத்து வந்துள்ளனர். ஆயினும் ஸச் சிஷ்யனுக்குக் கூட சொல்லாமல் மறைத்து வைக்க சாஸ்த்ரம் கூறவில்லை.

## १७. सदा विद्यानुसंहृतिः

ஸதா வித்யானு ஸம்ஹ்ருதி :

அனுஸம்ஹ்ருதி: அனுஸந்தானம். ஸதா எப்பொழுதும். பூஜை ஜபம் முதலிய விஹிதமான கர்மாக்களை அனுஷ்டானம் செய்யும் நேரம் தவிர மற்ற நேரங்களிலெல்லாம் தன் உபாஸ்ய

தேவதையான பரதேவதையை குறிக்கும் பரதேவதையின் ஸூக்ஷ்ம ரூபமான மந்த்ரங்களின் பொருளை அனுஸந்தானம் செய்துகொண்டே இருக்க வேண்டும். மந்த்ரங்களை மானஸமாக ஜபம் செய்வதும் வித்யானுஸந்தானமே. மானஸிக அனுஸந்தானத்திற்கு எந்த நியமும் இல்லை நடக்கும் பொழுதும் படுக்கும் பொழுதும், உட்கார்ந்திருக்கும் பொழுதும் உணவுக்கு பின்பும் ஸ்னானம் செய்யாத நிலையிலும் எப்பொழுதும் மானஸிக அனுஸந்தானம் செய்யலாம். அது ஸாதாரணமாக ஜபம் செய்வதை விட பன்மடங்கு சக்தி வாய்ந்தது.

(தொடரும்)



# श्री ललितासहस्रनामविवरणम्
# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம விவரணம்

(ஸ்ரீ யக்ஞேசன்)

## अकुला
அகுலா

குலம் என்ருல் சக்தி யென்றும். அகுலா என்ருல் சக்திக்கு எதிரான சிவ ஸ்வரூபிணி என்று பொருள். சாதாரணமாக மூலாதாரத்தின் கீழ் உள்ள ஸஹஸ்ராரத்தை குல ஸஹஸ்ராரம் என்றும் ப்ரம்ம ரந்த்ரத்திலுள்ள ஸஹஸ்ராரத்தை அகுல ஸஹஸ்ராரம் என்றும் கூறுவதுண்டு.

ஸ்ரீ வித்யா ஸம்ப்ரதாயம் கௌளம் என்றும் ஸமயம் என்றும் ப்ரதானமாக இருவிதம். பாஹ்யமாக பூஜை செய்வது கௌளம் ஆந்தரமாக யோக வழியில் பூஜை செய்வது ஸமயம் என்று ஸ்ரீ லக்ஷ்மீதரர் முதலியவர்களின் கருத்து ஸ்ரீ வித்யா சாஸ்த்ர ஸம்ப்ரதாயத்திற்கு முற்றிலும் முரணானது. சக்தி ப்ரதானமானது கௌளம் சிவ ப்ரதானமானது ஸமயம், மூலாதாரத்திலிருந்து ப்ரம்ம ரந்த்ரத்திலுள்ள ஸஹஸ்ரதள கமலத்திற்கு குண்டலினியை ஏற்றி ஸமாதியிலிருப்பது அகுலம் அல்லது ஸமயம். ப்ரம்ம ரந்த்ரத்திலிருந்து மீண்டும் மூலாதாரத்திற்கு





இறக்கி பாஹ்யம் ஆந்தரம் என்ற பாகுபாடற்ற ஸஹஜ நிலையிலிருப்பது கௌளம் என்றும் கொள்ள வேண்டும். கௌளமும் பூர்வ பூமிகை உத்தர பூமிகை என்று இருவகை. அகுலா என்ற நாமாவிற்கு அடுத்து ஸமயாந்தஸ்தா என்ற நாமாவை கூறுவதே இதை விளக்கும். ஸ்ரீ வித்யா சாஸ்த்திரத்தின் தலை சிறந்த ஸூத்ரக்ரந்தமான பரசுராம கல்பஸூத்ரத்தில் ஆரம்ப தருண யௌவன ப்ரௌட ப்ரௌடாந்த உன்மனா அனவஸ்தா என்ற ஏழு பூமிகைகளில் ப்ரௌட பூமிகை வரை ஸமயாசாரங்கள் என்று விளக்கும் ஸூத்ரம் முதல் நான்கு பூமிகைகளுக்கு ஸமய மார்கம் என்ற பெயரை கொடுக்கிறது. ஸமய த்வேஷிகள் மீது யோகினிகளின் சாபங்கள் விழட்டும் என்று பூஜையின் இறுதியில் கூறுவதும் இதையே விளக்குகிறது. அது கொண்டே அகுலா ஸமயாந்தஸ்தா என்ற நாமாக்களில் தொடங்கி கௌலினி குலயோகினி என்ற நாமாக்களில் ஸஹஸ்ர நாமாவை முடிக்கும் ஒரு ஸம்ப்ரதாயம் இருந்து வந்திருப்பதாக கர்ணபரம்பரை. ஸமயத்தில் தொடங்கி கௌளத்தின் உத்தர பூமிகையில் முடிவதே ஸ்ரீ வித்யா ஸம்ப்ரதாய முறை. இது போலவே வாம தக்ஷிண என்ற பேதங்களும் ஸங்கேதச் சொற்கள் என்று முன்னமேயே விளக்கியிருக்கிறேம்.

## समयान्तस्था
ஸமயாந்தஸ்தா

97

ஸமயம் என்ற முன் நான்கு பூமிகைகளுள் இருப்பவள். ஸமயம் என்ற சிவப்ரதானமான நிலையில் விளங்குபவள் என்று பொருள்.

## समयाचारतत्परा
ஸமயாசாரதத்பரா

98

ஸமயம் என்ருலே கட்டுப்பாடு. முதல் நான்கு பூமிகைகளில் ஸமயம் என்ற கட்டுப்பாடு உண்டு. பின் மூன்றும் சித்தம் போக்கு சிவன் போக்கு என்பது போல் ஸ்வேச்சையாக செயல்படுவதை குறிக்கிறது, ஸமயாசாரத்தில் ஈடுபாடுடையவள். முந்திய நிலைகள் இல்லையேல் பிந்திய நிலைகள் எப்படி ஏற்படும்.

வாமம் என்ருல் ஸ்ருஷ்டிப்ரதானம். அதற்கு எதிரான தக்ஷிண என்ருல் லயப்ரதானம்.

ஸமய என்ருல் முதல் நான்கு பூமிகைகள் அல்லது சிவப்ரதானம் என்று பொருள். கௌலம் என்ருல் சக்தி ப்ரதானம் என்று பொருள். இதை மனதில் கொண்டு நோக்கினுல் கீழே சொன்ன பல நாமாக்களின் பொருள் எளிதில் விளங்கும், ★

பொழுதும் நிந்திக்கக் கூடாது (நநிந்தயேத்). கன்னிகளின் குஹ்யஸ்தானம், மிருகங்களின் சேர்க்கை, திகம்பரையான ஸ்திரீ ஸ்தனங்கள் தெரியும் படி இருக்கும் ஸ்த்ரீகள், சூதாட்டம் சண்டை தீய செயல்கள் இவைகளை ஒரு பொழுதும் பார்க்கக் கூடாது. (நவிலோகயேத்)

ஸ்ரீ குரு தேவி (குருபத்னி) ஸாதுக்கள் சக்திசவி ஆத்மா ஸாதகர்கள் இவர்களை பக்தியுடன் பூஜிக்க வேண்டும். (பக்தித: பூஜயேத் ப்ரயத்னத:) குரு வாக்யம் குருபதேசம் ஸாதுக்களுடைய வார்த்தைகள் இஷ்ட தேவதை ஸ்வதர்மம், குலாசாரம் ஆத்மா இவைகளை எப்பொழுதும் பாவனை செய்ய வேண்டும். (ஸதாபாவயேத்).

சேரக் கூடாதவர்களுடன் சேருதல் துஷ்டர்களின் கூட்டு பொய் சொல்லுதல் பாபிகளுடன் கூட்டு இவைகளை விலக்க வேண்டும். (வர்ஜயேத்).

மலம், மூத்ரம், ரத்தம் சரீரத்தில் ஏற்படும் க்லேதம் இவற்றுடன் இருப்பவன் அங்கஹீனன், கள் குடிப்பவன் கபாலத்தை சேகரிப்பவன் இவர்களை கண்டு அருவருப்புப்பட வேண்டும். (ஜுகுப்ஸயேத்).

இந்த ஸமயா சாரத்தை கடைபிடிப்பவன் தேவி ஸாயுஜ்யத்தையடைந்து ஜீவன் முக்தனாகிறான்.

இப்படிப்பட்ட ஸமயாசாரதத்பரையாக பரதேவதை விளங்குகிறாள் என்று பொருள். (தொடரும்)



## ஸ்ரீ பரசுராம கல்பஸூத்ர விவரணம்

(ஸ்ரீ யக்ஞேசன்)

१८. सततं शिवतासमावेश:

18. ஸததம் சிவதாஸமாவேச:

ஸததம் எப்பொழுதும் சிவதா மங்களத்தை ஸமாவேச: அநுஸந்தானம் செய்ய வேண்டும். சிவம் என்றால் மங்களம் சிவதா மங்களத்தன்மை. உபாஸகன் தன் வாயினால் அமங்களமான வார்த்தையை கூறுவது கூடாது. நாம் சொல்லும் சப்தத்திற்கு



ஒரு சக்தியிருப்பதால் அச்லீலமான அல்லது அமங்களமான வார்த்தையைச் சொல்லும் பொழுது அது பலித்து விடக்கூடாது என்பதற்காக அம்மாதிரி வார்த்தைகளை தவிர்க்க வேண்டும். சாதாரணமாக கபாலம் என்று மண்டை ஓட்டிற்கு பெயர். அது அருவருக்கத்தக்கதும் அமங்களச் சின்னமாகவும் கருதப்படுகிறது. அதை வாயினால் சொல்லக்கூடாது என்பதற்காக வேதம் 'கபாலம் பகாலம் இதிப்ருயாத்' என்று சப்தத்தை மாற்றி உபயோகிக்க கற்றுக்கொடுக்கிறது. வேதம் சாதாரண வாழ்க்கையை மனதில் வைத்து அவ்விதம் கூறுகிறது. அதுவே பூமி காபேதத்தால் அருவருக்கப்படாததாக இருக்கலாம்.

சிவ என்று சிவ தத்வத்திற்கும் பெயர். சிவதா என்றால் சிவத் தன்மை. தன்னிடம் விளங்கும் ப்ரகாச ஸ்வரூபமான சிவத்தன்மையை எப்பொழுதும் அநுசந்தானம் செய்ய வேண்டும். எப்பொழுதும் சிவோஹம் என்று ஸ்வரூப அநுஸந்தானம் செய்து வர வேண்டும் என்றும் பொருள் கொள்ளலாம்.

१९. कामक्रोधलोभमोहमदमात्सर्यविहित हिंसास्तेय लोकविद्विष्टवर्जनम् ।

காமக்ரோத லோப மோஹ மதமாத்ஸர்யவிஹித ஹிம்ஸாஸ்தேயலோக வித்விஷ்ட வர்ஜனம்.

காமம் = பாலுணர்வு. தர்மத்திற்கு புறம்பான பாலுணர்வே இங்கு காமம் என்று கூறப்படுவது. தர்மத்தை மூலமாகக் கொண்ட தர்மத்திற்கும் மோக்ஷத்திற்கும் குந்தகம் விளைவிக்காத அர்த்த காமங்கள் சாஸ்திர விஹிதமானவே. க்ரோதம் என்றால் கோபம். லோபம் என்றால் பேராசை அல்லது ஆசைப்படக் கூடாததை ஆசைப்படுதல் மோஹம் விரும்பியது கிடைக்காததால் ஏற்படும் மதிமயக்கம். மதம் என்றால் செருக்கு அல்லது கர்வம். மாத்ஸர்யம் என்றால் பொறாமை. ஹிம்ஸா என்றால் ப்ராணிகளை துன்புறுத்துதல் அல்லது கொல்லுதல். யக்ஞயாகாதிகளில் ஹவிர் பாகத்திற்காக விதிக்கப்பட்டது விஹித ஹிம்ஸை விதிக்கப்படாததுதான் இந்த்ரியஸுகத்திற்காக அல்லது தன் த்ருப்திக்காக செய்வது. ஸ்தேயம் என்றால் களவு. லோகவித்விஷ்டம் உலகோர் வெறுப்பது. உலகோர் சிலவற்றை அல்லது சிலரை வெறுக்கலாம். வெறுப்பிற்கு காரணம் அதனிடம் அல்லது அவர்களிடம் உள்ள தோஷமே. காமம் முதல் லோகவித்விஷ்டம் வரையுள்ளவற்றை உபாஸகன் கைவிட வேண்டும். காமக்ரோதமோஹமதமாத்ஸர்யம் என்ற ஆறும் உடன்

ப்ரீதி சொல்லும் ஆறு விரோதிகளாகக் கூறுவர். ஒன்றிடம் நாம் வைக்கும் பற்று அதனிடம் காமத்தையும் காமம் நிறைவேறாத பொழுது க்ரோதமும் க்ரோதத்தால் மோஹமும் மோஹத்தால் ஸ்ம்ருதி ப்ரம்சமும் (நினைவு தடுமாறி க்ருத்யாக்ருத்யக்ஞானத்தையிழப்பது) ஸ்ம்ருதிப்ரம்சத்தால் புத்தி நாசமும் புத்தி நாசத்தால் அழிவையும் ஒருவன் அடைகிறான் என்கிறது பகவத்கீதை. வெளி சத்ருக்களை ஜயிப்பது ஸுலபம், உள் சத்ருவை ஜயித்தவனே உண்மையில் வீரன். தீரன். மனோ விகாரத்திற்கு காரணமானவைகள் சுற்றிலும் இருக்கும் பொழுது எவனது மனம் விகாரமடைவதில்லையோ அவனே தீரன் என்கிறான் காளிதாஸனும்.

தர்மங்களில் ஸாமான்ய தர்மம் விசேஷ தர்மம் என்று இரு வகை. நஹிம்ஸ்யாத்ஸர்வா பூதானி என்கிறது வேதம். ஆனால் அதே வேதம் லோகக்ஷேமத்திற்காக ஒரிரு பலிகளை விதிக்கிறது. பலரின் க்ஷேமத்திற்காக ஒரிருவரை த்யாகம் செய்வதே த்யாகம். பெரிய லாபத்திற்காக சிறிய பொருளை த்யாகம் செய்வதே யாகம். சமூக நலத்திற்காக ஒரிரு சமூக விரோதிகளை அழிப்பது அதர்மமாக கருதப்பட மாட்டாது. நாட்டின் நலனுக்கு சில ஆயிரம் படை வீரர்களை த்யாகம் செய்வது ராஜ தர்மம். கண்டையைப் போட்டு வராலை பிடிப்பது மதியீனமல்ல, ஹிம்ஸை அஹிம்ஸை என்பதை நிர்ணயிப்பது அவ்வளவு ஸுலபமல்ல. இது போன்றே சத்யம் அஸத்யம் பேசுவது. ஒருவன் ஒரு சிறிய உண்மையைப் பேசுவதால் பலருக்கு தீங்கு நேருமானால் அந்த ஸத்யத்தால் யாருக்கு என்ன லாபம். புதரில் மறைந்திருந்தவர்களை காட்டிக் கொடுக்க மனமில்லாமல் திசை திருப்பி விட்டு தர்மம் புரிந்ததை விவரிக்கும் உபாக்யானங்கள் உண்டு. அது போன்றே காயிகம் வாசிகம் மானஸிகம் ஆக மூன்று விதமான கொல்லாமையையும் கடை பிடிக்க வேண்டும். ஆனால் ஒரிரு ப்ராணிகளை விதிப்படி பலியிடுவதன் மூலம் ஸமூகத்தை நம் பூ மண்டலத்தை ஏன் இந்த உலகத்தின் க்ஷேமத்திற்காக பாடுபடுவது ஹிம்ஸையாகாது. நம் நாட்டில் மாம்ஸபோஜிகள் அதிகம். ஆயிரக்கணக்கான ப்ராணிகள் தினமும் ஆகாரத்திற்காக கசாப்பு கடைகளில் பலியிடப்படுவதை காண்கிறோம். ஆனால் அதை சாதாரண காரியமாகக் கருதுகிறோம். சரீரம் என்றாலே அழியப் போகும் உடல். அழியாத ஆத்மா ஒன்று உண்டு என்று நம்புபவனே ஆஸ்திகன். அழிவற்ற ஆத்மா பந்தத்தை அடைந்து அழிவது போல் தோன்றும் நிலையே ஜீவநிலை. ஜீவனுக்கு அழியாத ஆத்ம ஸ்வரூபத்தை





புணர்த்தி ஒரிரு ப்ராணிகளின் உடலை உலக க்ஷேமத்திற்காக த்யாகம் செய்வதே விஹித ஹிம்ஸை. அத்ரி முதலான எண்ணற்ற மஹர்ஷிகள் வேதவிதிப்படி வேள்விகள் நடத்தி வந்தனர். அவர்கள் எல்லோரும் கருணாமூர்த்திகள். அவர்களுக்கு புரியாத ஒரு தர்மம் நமக்கு புரிந்துவிட்டதாக கூறுவது அகங்காரத்தின் எதிரொலியே. சாஸ்த்ரீய அனுஷ்டானம் செய்ய துணிவு இல்லாதவர்கள் நமக்கு அப்படிப்பட்ட துணிவு இல்லையே என்று வருந்துவதை விட்டு யுக்தியின் பேரிலும் தான் தோன்றிகளின் உபதேசத்தின் பேரிலும் அனுஷ்டானங்களை தாறுமாறாக செய்வது தங்களையும் தம் முன்னோர்களான மகாதபோதனர்களான மஹர்ஷிகளையும் நாம் உய்ய நமக்கு ஈச்வரனால் அளிக்கப்பட்ட வேத தந்த்ர ஆகமங்களுக்கும் செய்யும் பெரிய துரோகமாகும்.

லோகத்தில் பெரும்பாலோர் ஒன்றை வெறுத்தால் அதை நாமும் கைவிட வேண்டும். இல்லாவிடில் பெரும்பாலானோரின் வெறுப்பிற்கு நாம் ஆளாக நேரும். ஸாதாரண விஷயங்களில் உலகமே புத்திசாலிகளுக்கு ஆசார்யன்.



## தக்ஷிணா காளிகா

(ஸ்ரீ யக்ஞேசன்)

ஆத்யா எனப்படும் தக்ஷிணகாளிகாவின் உபாஸனை கேவல ப்ரம்ம நிலையை கொடுக்க வல்லது. ப்ரம்மத்தை பரப்ரம்மம் என்றும் கேவல ப்ரம்மம் என்றும் வ்யவஹார ஸௌகர்யத்திற்காக குறிக்கலாம். ஸ்ருஷ்டிக்ரமத்தில பரப்ரம்மமாக விளங்குபவள் லயத்தில் கேவல ப்ரம்மமாக விளங்குகிறாள். பரா, பராஅபரா அபரா என்று உபாஸனையை பூமிகா பேதத்தால் மூன்று விதமாக பிரிக்கலாம். கேவலம் பாஹ்ய பூஜைகள் செய்வது அபரா பூஜை. இது மந்தாதிகாரிகளுக்கு. பராஅபரா பூஜை என்பது மிச்ர பூஜை என்றும் கூறப்படும். இதில் அந்தர் யஜனம் பஹிர் யஜனம் இரண்டும் கலந்திருக்கும். இது மத்யமாதிகாரிகளான வீரர்கள் செய்யும் அனுஷ்டானம். அந்தர் யஜனம் பஹிர் யஜனம் என்ற இரு நிலையையும் கடந்து ப்ரம்ம பாவத்தில்

ஆதார கமலங்களாகவும் சொல்வதுண்டு. ஒவ்வொரு சக்ரத்திற்கும் ஆதியிலும் அந்தத்திலும் இரு க்ரந்திகள். க்ரந்தி என்றால் முடிச்சு. மூலாதாரத்தில் 4 தளங்களுடைய ஒரு கமலம். அதன் கர்ணிகையின் மத்தியில் பிந்து ஸ்தானத்தில் குலகுண்டம் என்று பெயருள்ள (முகத்தை) த்வாரத்தை மறைத்துக் கொண்டு ஸர்பாகாரமான குண்டலினி என்ற சக்தி எப்பொழுதும் உறங்கிக் கொண்டிருக்கிறாள். ஆகையால் இந்த குண்டலினிக்கு ஆதாரமாக இருப்பதாலும் ஸுஷும்னைக்கு மூலமாக இருப்பதாலும் இந்த சக்ரத்திற்கு மூலாதாரம் என்று பெயர். மூலாதாரத்திற்கு அடுத்த ஸ்வாதிஷ்டானம் என்ற சக்ரம் ஆறு தளங்களை கொண்டது. அங்குள்ள க்ரந்தி த்வயத்தை விசேஷமாக பிளந்து கொண்டு குண்டலினி மேல் நோக்கி செல்லுகிறாள். அந்த ஸ்தானம் ப்ரம்மாவினுடைய ஸ்தானமாதலால் அந்த க்ரந்திக்கு பிரம்மக்ராந்தி என்று பெயர். மூலாதார சக்ரத்தை வ்யக்தமாகச் சொல்லி ப்ரம்ம க்ரந்தி விபேதினி என்ற பதத்தால் ஸ்வாதிஷ்டான சக்ரம் மறைமுகமாக குறிப்பிடப்பட்டுள்ளது.

मणिपूरान्त रुदिता

மணி பூராந்தருதிதா 101

विष्णुग्रन्थिविभेदिनी

விஷ்ணு க்ரந்தி விபேதினி 102

நாபியில் உள்ள பத்து தளங்களைக் கொண்ட சக்ரம் மணி பூரக சக்ரம். ஸாமயிக பூஜையில் ரத்னங்களால் தேவி இங்கு விளங்குகிறாள் என்பதால் இதற்கு மணி பூரகம் என்று பெயர். அதனுள் இருக்கும் க்ரந்தியை பிளந்து வெளிப்படுகிறாள் என்று மணிபூராந்தருதிதா. விஷ்ணு மணி பூரக சக்ரத்தில் வாஸம் செய்வதால் அந்த க்ரந்திகளுக்கு விஷ்ணு க்ரந்திகள் என்று பெயர். மேலுள்ள க்ரந்தியை முக்கியமாக பிளந்து மேல் செல்கிறாள். ஆகையால் விஷ்ணு க்ரந்தி விபேதினி.

आज्ञाचक्रान्तरालस्था रुद्रग्रन्थिविभेदिनी

ஆக்ஞாசக்ராந்தராலஸ்தா ருத்ரக்ரந்தி விபேதினி 103, 104

ப்ருமத்தியில் இரண்டு தளமுள்ள கமலம். அதற்கு ஆக்ஞா சக்ரம் என்று பெயர். ஸ்ரீ குரு இங்கு வாஸம் செய்வதால் ஆக்ஞா சக்ரம் என்று பெயர். அதனை மனதை [illegible] செய்யும் பழக்கத்தால் சிறந்த ஞானம் பிறக்கும். அதன் நடுவில்





வஸிக்கிறாள் என்று ஆக்ஞா சக்ராந்தராலஸ்தா. ருத்ர க்ரந்தி த்வயம் ஹ்ருதயத்திலுள்ள அனாஹத சக்ரத்தை சார்ந்தது. அதை பிளக்கிறாள் என்று ருத்ர க்ரந்தி விபேதினி. ஆனால் அனுஷ்டானத்தில் இதற்கு மாறாக அதாவது ஆக்ஞா சக்ரத்திற்கு பிறகு ருத்ர க்ரந்தி பேதம். பாட க்ரமத்தைவிட அர்த்த க்ரமம் பலவத்தானதால் ஔசித்யத்தையும் மற்ற இடங்களிலுள்ள விவரணங்களையும் மனதிற் கொண்டு அப்படி வ்யாக்யானம் செய்ய வேண்டும். இதற்கு வேறுவிதம் வ்யாக்யானம் செய்வதும் உண்டு.

ஸ்ரீ வித்யையில் நான்கு கண்டங்கள். ஆக்னேய ஸௌர ஸௌம்ய சந்த்ர கலைகள் என்று. அவைகளே வாக்பவ காமராஜ சக்தி தூர்ய என்று கூடங்களாக விளங்குகின்றன. அவைகளில் மூன்று ஹ்ருல்லேகைகள் (ஹ்ரீம் என்ற பீஜம்) க்ரந்திகள். அவை மூன்றும் ருத்ர விஷ்ணு ப்ரம்ம க்ரந்திகள் எனப்படுகின்றன. அந்த மூன்றையும் பிளந்து மேல் செல்கிறாள்.

உண்மையில் தத்தாத்ரேய ஸம்ஹிதையில் ஷட்சக்ர ப்ரகரணத்தில் விவரிக்கப்பட்ட கௌளிகார்த்தபரமானவைகள் இந்த ஆறு நாமாக்களும். அங்கு கூறப்பட்டுள்ளபடி மூலாதாரம் முதலிய ஆறு சக்ரங்களுக்கு குலம் என்று பெயர். க்ரந்தித்ரயம் அங்குள்ள மூன்று சக்ரங்களில் உள்ளன. அதாவது ப்ருத்வீ அப்பு சக்ரத்வயம் ப்ரம்ம க்ராந்தி; அக்னி ஸூர்ய சக்ரத்வயம் விஷ்ணுக்ரந்தி; வாயு ஆகாச மயமான சக்ரத்வயம் ருத்ரக்ரந்தி, அதாவது மூலாதார ஸ்வாதிஷ்டானம் ப்ரம்ம க்ரந்தி மணிபூரகம் அனாஹதம் விஷ்ணு க்ரந்தி விசுத்தி ஆக்ஞா ருத்ர க்ரந்தி.

(தொடரும்)

---

## ॥ परशुरामकल्पसूत्र विवरणम् ॥

## ஸ்ரீ பரசுராம கல்பஸூத்ர விவரணம்

(ஸ்ரீ யக்ஞேச பட்டாரகன்)

एकगुरूपास्तिरसंशयः ।

20. ஏக குருபாஸ்தி ரஸம்சய: |

37

एक = ஒரே ஒரு गुरु = குருவினுடைய उपास्ति: உபாஸனை संशय: — (இதில்) சந்தேகமே இல்லை. ஸ்ரீ வித்யோபாஸகன், ஒரு குருவைத்தான் உபாஸனை செய்யவேண்டும். இதில் யாதொரு சந்தேகமுமில்லை. இந்த ஸூத்ரம் சற்று ஆழ்ந்து கவனிக்கத்தக்கது.

நாம் வாழ்க்கையில் பல விஷயங்களைக் கற்றுக் கொள்கிறோம் அந்தந்த விஷயங்களை கற்றுக்கொடுப்பவர் ஆசான் ஆவர். ஆசானை குருவென்றும் சொல்லலாம். கணிதம், சரித்திரம், பூகோளம், தமிழ், ஸம்ஸ்க்ருதம், விஞ்ஞானம் முதலிய பல விஷயங்களை பல ஆசான்களிடமிருந்து கற்றுக் கொள்கிறோம். அது போல் எண்ணற்ற மந்த்ரங்கள் உள்ளன. ஒவ்வொரு காரியத்திற்கு ஒவ்வொரு மந்த்ரம் உபயோகமானது. பல குருமார்களிடமிருந்து பல மந்த்ரங்களை கற்றுக் கொள்கிறோம். தேனீ பல புஷ்பங்களிலிருந்து தேனை சேகரிக்கிறது. அது போல் தன் அறிவை பெருக்கிக் கொள்ள வேண்டுமென்ற அவாவின் காரணமாக ஸாதகன் பல குருக்களை அடைகிறான். அடையலாம் என்ற வாக்கியமும் இருக்கிறது.

मधुलब्धो यथाभृङ्गः पुष्पात् पुष्पान्तरं व्रजेत ।
ज्ञानलुब्धस्तथा शिष्यः गुरो गुर्वन्तरं व्रजेत् ॥

இது சாதாரண சாஸ்த்ர விஷயம். ஸாதாரணமந்த்ர ஸ்வீகார விஷயம். ஸாதாரண விஷயங்களையோ ஸாதாரண மந்த்ரங்களையோ உபதேசம் செய்யும் ஆசானை மனதிற் கொண்டு வந்தது அல்ல இந்த ஸூத்ரம் அப்படிப்பட்ட ஆசானைக்குறிக்கும் சொல் அல்ல இங்குள்ள குரு என்ற சொல் சாதாரண விஷயங்களை சேகரிப்பதாலோ ஸாதாரண மந்த்ரங்களை குறிப்பிட்ட காரியத்திற்காக ஸ்வீகரிப்பதாலோ ஜன்ம ஸாபல்யம் ஏற்படப்போவதில்லை. உதர நிமித்தம் பஹுக்ருத வேஷ: என்பது போல் உதரநிமித்தம் சிஷ்ய ஸஞ்சயம் செய்யும் குருமார்கள் தான் உலகில் அதிகம்.

சாமான்ய சாஸ்த்ர க்ஞானமும் ஸ்ரீ வித்யா சாஸ்த்ர க்ஞானமும் ஸம்ப்ரதாய க்ஞானமும் இல்லாமல் ஒரிரு மந்த்ரத்தை கற்றுக் கொண்டு மறுநாளே தானும் குருவாக வேண்டும் என்ற அடக்கவொண்ணா அவாவினால் சந்திப்பவர்களுக்கெல்லாம் மந்த்ரங்களை வாரிவழங்க நாளை சிஷ்யன் வேறு எங்காவது தன்னை விட விஷயம் தெரிந்தவனிடம் சிஷ்யனைப் போய்விடப் போகிறானே என்ற பயத்தில் பாதுகைகளையும் வழங்கி ஒரு விதக்



கட்டுப்பாட்டில் சிஷ்யர்களை பெருக்கி ஸ்ரீ வித்யா ஜீவனம் செய்பவர்களை மனதிற் கொண்டு வந்ததல்ல ஏககுருபாஸ்திரஸம்சய: என்ற ஸூத்ரம். ஸ்ரீ வித்யையில் குரு லக்ஷணங்களும் சிஷ்ய லக்ஷணங்களும் நன்கு விவரிக்கப்பட்டுள்ளதால் தகுந்த சிஷ்யன் தகுந்த குருவையண்டி குரு தேவதா மந்த்ரம் ஆத்மா இவற்றின் ஐக்யத்தையனுஸந்தானம் செய்யக் கற்று ஆத்ம ஸாக்ஷாத்கார மென்ற ஆத்ம லாபத்தைப் பெற்றுவிட்ட படியால் அப்படிப்பட்ட ஆத்ம லாபத்தை தனக்களித்த ஸ்ரீ வித்யா குரு ஒருவரையே உபாஸனை செய்ய வேண்டும். க்ரம தீக்ஷா பக்ஷத்தில் எல்லாவற்றிற்கும் மேலான மஹா பூர்ணாபிஷேகம் செய்வித்து மஹா ஷோடசியை உபதேசித்து மஹா பாதுகையையளித்த ஸ்ரீ குரு ஒருவரையே உபாஸனை செய்ய வேண்டும் என்று கருத்து.

स्यात्म लाभात्परं किंचित्

என்று அவன் அவன் தன் ஆத்மாவை ஸாக்ஷாத்காரம் செய்வதற்கு மேல் ஒன்று இல்லை.

உபநயனம் செய்து கொண்டு காயத்ரியை உபாஸித்து வேதங்களில் மறைவாக விளங்கும் பஞ்சதசி என்ற மூல மந்த்ரத்தை தீக்ஷாபூர்வகமாக ஸ்வீகரித்து ஸ்வருபஸாக்ஷாத்காரத்தை பெற்ற ஸ்ரீ வித்யோபாஸகனுக்கு ஜன்மஸாபல்யம் ஏற்பட்டுவிட்டபடியாலும் இனியடைய வேண்டியது ஒன்று இல்லாமையாலும் அப்படிப்பட்ட ஸ்ரீ வித்யையை உபதேசித்த ஆசானே இங்கு குரு என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. ஸ்ரீ வித்யா குருவிற்கு இருக்க வேண்டிய குணங்களுடன் இருக்கும் குருவை முதலில் தேர்ந்தெடுக்க வேண்டும். உபதேசத்திற்கு முன் தீக்ஷைக்கு முன் குரு சிஷ்யனை பரீக்ஷித்து ஸ்வீகரிப்பது போல் சிஷ்யனும் இவரை குருவாக வரித்து நாம் நமக்கு வேண்டியதைப் பெற முடியுமா என்று தீர்க்கமாய் ஆலோசித்து பிறகே குருவாக வரிக்க வேண்டும். தற்காலிகமாய் பரவசப்பட்டு ஒருவரை குருவாக வரித்து பிறகு தனக்கு வேண்டிய க்ஞானத்தை அவர் உபதேசிக்கத் தகுதியற்றவராக கண்டு வீண் சஞ்சலப்படக் கூடாது. எவரிடம் நம்மையும் அறியாது ஈடுபாடு பக்தி ஏற்படுகிறதோ எவர் சுயநலம் இல்லாமல் விளங்குகிறாரோ எவர் சாஸ்திரம் அனுஷ்டானம் இரண்டிலும் தேர்ந்து சிஷ்யனின் சாஸ்த்ரீய சந்தேகங்களையும் அனுஷ்டானத்தில் ஏற்படும் சிக்கல்களையும் போக்க வல்லவரோ அவரையே குருவாக வரிக்க வேண்டும். ஸ்ரீ வித்யாசாஸ்திரத்தில் அம்பாளையுபாஸிப்பதை

விட குருவிடம் பக்திபாவத்தை தொடர்ந்து கடைபிடிப்பது தான் கடினம்.

இதையே [illegible] என்று சுருதியும் விளக்குகிறது. பஞ்சதசீ தீக்ஷைக்கு பிறகு பாலா மந்த்ரோபதேசம் செய்த குருவிற்கு உபாஸனையில்லை. இப்படியே ஷோடசீ தீக்ஷைக்குப் பிறகு பஞ்சதசீ தீக்ஷா குருவிற்கு. இங்கு உபாஸனை என்ற சொல்லை கவனிக்கவும். உபாஸனை வேறு நமஸ்காரம் செய்தல் என்பது வேறு. பலர் இதை போட்டுக் குழப்பிக் கொண்டுள்ளனர். மந்த்ரம் தேவதை இவற்றுக்கு ஒப்பாக வழிபடுவது உபாஸனை. நமஸ்காரம் என்பது தனக்கு தீக்ஷையாலோ அனுபவத்தாலோ ஜ்யேஷ்டரான ஒருவனுக்கு ஸாமயிக தர்மப்படி செய்ய வேண்டிய ஒரு கடமை. இதைச் செய்தால் செய்பவனுக்கு ச்ரேயஸ். இல்லாவிடில் ச்ரேயோஹானி. இதுபோல் சிரஸில் குரு விளங்குவதால் சிரஸால் பாரங்களை தாங்கக்கூடாது என்று சாஸ்த்திரம். உடலின் சிரஸில் குரு விளங்குகிறார். ஆகையால் நான் ஒருவருக்கும் நமஸ்காரம் செய்யக் கூடாது என்று நினைப்பது குருபக்தியின் சின்னமல்ல. அஹங்காரத்தின் சின்னமே. வணங்க வேண்டிய இடத்தில் வணங்க வேண்டியதுதான். பூஜ்ய பூஜா வ்யதிக்ரமம் வணங்க வேண்டியவர்களை வணங்காதது என்பது பெரிய குற்றமாகும்.

ஏக குருபாஸ்த்திற்கும் வணங்க வேண்டியவர்களை வணங்குவதற்கும் சம்பந்தம் இல்லை. ஜடபரதன் மாதிரி பலரை குருமார்களாகக் கொள்வது பெருமை என்று நினைக்க வேண்டாம். அங்கு ஸாதாரண ஆசான் என்னும் பொருளில் குருமார்கள் என்று உபயோகிக்கப்பட்டுள்ளது. ஆனால் இங்கு ஸ்ரீ வித்யையில் மகாபூர்ணாபிஷேகம் செய்வித்து, மகா குரு பாதுகை கொடுத்த ஒருவரையே குருவாகக் குறிப்பிடுவதால் அப்படிப்பட்ட குரு கிட்டிய பின் அவர் ஒருவரையே உபாஸனை செய்ய வேண்டும் என்று கருத்து. அதற்கு முன் இருந்த குருமார்களை கௌரவ புத்தியுடன் நோக்கக்கூடாது என்பதல்ல. மகாபூர்ணாபிஷேக குரு வ்யாபகராகையால் அதற்கு முன் இருந்த குருமார்கள் அவருள் அந்தர் பாவம் ஆகிறார்கள். தனக்கு ஜ்யேஷ்டர்களிடத்தில் மரியாதையாக இருக்க வேண்டும் என்ற ஸாதாரண ந்யாயப்படி மற்றவர்களிடம் ஸாதகனுக்குள்ள கௌரவ புத்தி குறையக்கூடாது. பூர்ணாபிஷேக குரு குல ப்ரஷ்டராக ஆகிவிட்டால் ஸம்ப்ரதாய சுத்திக்காக திவ்ய பூமிகையில் ப்ரவேசம் அளித்த குரு ரூபிணியான பரதேவதையையே குருவாகக்



கொண்டு ஏககுருபாஸ்தி செய்யும் பக்குவம் கொண்டவர்கள் விஷயத்தில் "குருத்யாகாத்ருவோ ம்ருத்யு: மந்த்ரத்யாகாத்தரித்ரதா" (குருவை த்யாகம் செய்வதால் மரணமும் மந்த்ர த்யாகத்தால் ஏழ்மையும் ஏற்படும்) என்ற ஸாமான்ய தர்மத்திற்கு விதி விலக்கு உண்டு. இதை பாமரர்களும் பசுக்களும் அறிய இயலாது.

(தொடரும்)

---

# ஸ்ரீ தக்ஷிணகாளிகா

(ஸ்ரீ யக்ஞேசன்)

ஸ்ரீ தக்ஷிணாவின் மந்த்ரம் யந்த்ரம் இவற்றைப்பற்றி சுருக்கமாக விளக்கினோம். ஸாதகன் ஸங்கல்பம் விக்னோத்ஸாரணம் பூதசுத்தி ந்யாஸங்கள் பாத்ரா ஸாதனம் இவற்றை செய்து கொண்டு குரு யஜனம் செய்துவிட்டு அந்தர் யாகம் செய்து கொண்டு தன்னுள் பைந்தவ ஸ்தானத்தில் த்யானம் செய்த ஸ்ரீ தக்ஷிணகாளிகாவின் மூர்த்தியை ஸ்ரீ மஹாகாலன் மற்ற ஆவரண தேவதைகள் இவர்களுடன் பாஹ்யமான பீடத்தில் யந்த்ரத்தில் ஆவாஹனம் செய்து உபசாரங்களை ஸமர்பித்து ஆவரண பூஜை செய்து பிறகு பூஜாவஸானத்தில் பாஹ்யமாக உபாஸிக்கப்பட்ட பரதேவதையை தன் ஹ்ருதய ஸ்தானத்தில் மீண்டும் சேர்த்துக் கொண்டு தத்ரூபமாக விளங்க வேண்டும் என்பதே உபாஸனையின் குறிக்கோள். தேவதையின் ஸ்வரூபத்தை குறிப்பிட்டது அது ஸ்தூலம் ஸூக்ஷ்மம் பரம் அல்லது வாஸனாமயம் என்று விளக்கினோம். தக்ஷிணகாளியின் ஸ்தூல ரூப த்யானம் வருமாறு

करालवदनां घोरां मुक्तकेशीं चतुर्भुजां ।
कालिकां दक्षिणां दिव्यां मुण्डमाला विभूषिताम् ॥
सद्यश्छिन्नशिरः खड्गवामाधोर्ध्वकराम्बुजां ।
अभयंवरदंचैव दक्षिणोर्ध्वाधः पाणिकां ॥

runs through the Meru Danda (spinal column) extending from the middle of the kanda to the Sahasrara Anothernadi named vajra or chitrini nadi lies inside Sushumna subtle like a spiders web extends from organ of regeneration to the head. Inside the chitrini Brahma nadi permeates from the mouth of Hara (in the Trikona) to the place of Adi-Deva (in the brain). At the beginning of Brahma Nadi shines the Brahma Dwara which is the entrance to the region from where Amrita flows. This is also termed as a granthi sthana which is the meeting place of sushumna and kanda. Also it is known as Sushumna Vadana (mouth of Sushumna.)

Poornananda locates Adhara lotus as attached to the mouth of Sushumna and placed below organ of regeneration and above exit of alimentation. Tne soft Trikona, known as kamakya is situated in the karnika of Adhara lotus. Inside this triangle is to be percieved the Swayambu Linga, beautiful like just-molten gold with his head downwards, hued and shaped like a new leaf. Over this the brilliant kundalini emits her luminosity. She is finer than the fine lotus stalk fibre, covers the mouth of Brahma Dwara by her own mouth coiling three and half rounds. The light emitted by Kundalini in the cavity of Adhara lotus is comparable to the brilliant light of several galaxies together. Can we identify these locations of of Yoga Sastras in terms of Neuro physiology? Let us examine this in the next series:— (Continued)



## ॥ श्रीपरशुरामकल्पसूत्राविवरणम् ॥

## (ஸ்ரீ பரசுராம கல்பஸூத்ர விவரணம்)

(ஸ்ரீ யக்ஞேசபட்டாரகன்)

२१. सर्वत्रनिष्परिग्रहता

ஸர்வத்ரநிஷ்பரிக்ரஹதா

பரிக்ரஹம் என்றால் தானம் முதலியது வாங்குவது. நிஷ்பரிக்ரஹதா தானம் முதலியது வாங்காது இருத்தல். ஸர்வத்ர



எல்லா இடங்களிலும் தானம் முதலியது வாங்குவது ஸ்ரீ வித்யோபாஸனுக்கு கூடாது. எல்லா இடங்களிலும் என்பதால் எல்லா காலங்களிலும் என்றும் பொருள் கொள்ள வேண்டும். அதாவது கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைந்து பரதேவதையை உபாஸனை செய்வதையே தன் கடமையாகக் கொள்ளவேண்டும். மற்றவர்கள் கொடுப்பனதஸ்வீகரித்து பூஜை முதலியவை செய்வதும் முறையல்ல என்பதைக் குறிக்கவே ஸர்வத்ர என்ற சொல். இது ஸாதாரணமான பொருள்.

பரிக்ரஹம் என்றால் விருப்பத்துடன் ப்ரதமத்விதீயத்ருதீய சதுர்த்த பஞ்சம ஸ்வீகாரம். த்ரவ்யங்களில் ருசி காரணமாக அவைகளை ஸ்வீகரிப்பது பரிக்ரஹம் எல்லாவிடங்களிலும் எல்லா காலங்களிலும் ருசி காரணமாக ப்ரதமாதித்ரவ்யஸ்வீகாரம் செய்யக்கூடாது. அப்படி செய்யுங்கால் அது பரதேவதையின் யஜனமாக ஆகாமல் அவனவனுடைய ஜீவ ஸ்வபாவத்தை அல்லது அஹங்காரத்தை வளர்ப்பதாக முடியும். தேவதையை உத்தேசித்து த்ரவ்யத்தை த்யாகம் செய்வதல்லவா யாகம், மானஸிகமாக இருக்க வேண்டுமென்பதற்காகத்தானே உத்தேச த்யாகம் செய்யப்படுகிறது. த்ரவ்யத்தை ஸ்வீகரிப்பதால் துஷ்டியை அடைபவன் அந்த த்ரவ்யம் என்னுடையது அல்ல எனக்கு அல்ல என்று எவ்வாறு கூற முடியும்? த்ரவ்யத்தில் ருசியை வைத்தால் தான் செய்யும் அசாஸ்த்ரீயமான நடத்தைகளைக்கூட சாஸ்த்ரீயமாக வாதிக்க யுக்திவாதம் செய்ய நேரிடும். யுக்தி வாதத்தால் விஷயமறியாதவர்களை மயக்கிவிடலாம். பிறர் வாயையடைத்துவிடலாம். ஆனால் அவரவர் அந்தராத்மாவிற்கு (அது விழித்துக்கொண்டிருந்தால்) தெரியும் அவரவர் செய்யும் த்ரவ்யஸ்வீகாரம் ருசியினாலா அல்லது பரதேவதையின் துஷ்டிக்கா என்று. சாஸ்த்ரீய அனுஷ்டானம் என்பது சாஸ்த்ரீய த்ரவ்யங்களையுபயோகிப்பது மாத்திரமல்ல அதையுபயோகிப்பதில் சாஸ்த்ரீய நோக்கும்கூட.

சாஸ்த்ரீய நோக்கிற்கு ஸ்ரீ குருதேவர் கூறும் உதாஹரணம் கவனிக்கத்தக்கது.

"ஹனுமார் இலங்கையில் ப்ரவேசித்ததும் அவருக்கே வியப்பாக இருந்தது. எங்கு பார்த்தாலும் வேத கோஷம், வீட்டிற்கு வீடு அக்னி ஹோத்ரம். அவ்வளவு சாஸ்த்ரீய அனுஷ்டானங்களுடன் விளங்கிய இலங்கா நகரம் வெகு சீக்கிரத்தில் ஹனுமனால் தீக்கிரையாக்கப்பட்டது என்பது மாத்திரமின்றி ராவண யுத்தத்தின் போது தரைமட்டமாகிவிட்டது. வைதிக அனுஷ்டானம் பொலிந்த இடம் எப்படியழிந்துவிட்டது? அழிவிற்கு

40

காரணம் அனுஷ்டானத்தில் சாஸ்த்ரீய நோக்கின்மையே. ஆகையால் சாஸ்த்ரீய அனுஷ்டானம் செய்யுங்கள் சாஸ்த்ரீய நோக்குடன் செய்யுங்கள். உங்கள் இந்த்ரிய சாபல்யத்தால் செய்யும் காரியத்திற்கு சாஸ்த்ரீய வர்ணம் பூசாதீர்கள். அந்த வர்ணம் வெகுநாள் நீடிக்காது." ஸ்ரீ குருதேவரின் வாக்கு இந்த ஸூத்ரக் கருத்தை தெளிவாக்குகிறது. எவ்வளவு பகட்டான அனுஷ்டானங்கள் செய்யப்பட்டாலும், ஜபம், ஹோமம், பூஜை புரச்சரணங்கள் செய்யப்பட்டாலும் அவைகளைக் கண்டு மயங்க வேண்டாம். சுயநலமும், இந்த்ரிய சாபல்யமும் இல்லாது செய்யப்படும் அனுஷ்டானமே பலனைக் கொடுக்கும். மற்றவை சமயம் வரும் போது பெரிய நாசத்தையே விளைவிக்கும். தங்களை உபாஸகர்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கும் பலர் வாழ்க்கையில் கஷ்டப்படுவதற்கு காரணம் அவர்களின் அனுஷ்டானத்தில் சாஸ்த்ரீய நோக்கு குறைந்திருப்பதே. அவர்கள் அனுஷ்டானத்திற்கு மூலம் அவர்களின் இந்த்ரிய சாபல்யமே என்பது விளங்கும். கர்மாக்களை எப்படி செய்ய வேண்டும் என்பதை அடுத்த ஸூத்ரம் நன்கு விளக்குகிறது.

(தொடரும்)

## நித்யாஷோடசிகார்ணவ விவரணம்-3

(ஸ்ரீ யக்ஞேசபட்டாரகன்)

தந்த்ரம் புராணம் எல்லாவற்றிற்கும் வேதத்தை ஆதாரமாகக் கொண்டே ப்ராமாண்யம் என்று கூறினால் சில தந்த்ரங்களில் வேத விருத்தமான கருத்துக்கள் காணப்படுகின்றன. பாஞ்சராத்ரம் பாசுபதம் முதலிய தந்த்ரங்கள் வேத விருத்தமாக இருப்பதால் ச்ரௌதஸ்மார்த்த கர்ம பூமிகையிலிருந்து வழுக்கி விழுந்தவர்களுக்காகவே அம்மாதிரி தந்த்ரங்கள் தோன்றியுள்ளன என்று கூறப்பட்டுள்ளது.

पाञ्चरात्रं भागवतं तथा वैखानसाभिधम् ।
वेदभ्रष्टान्समुद्दिश्य कमलापतिरुक्तवान् ॥

என்ற வாக்யப்படி தந்த்ரங்கள் வேதப்ரஷ்டர்களுக்கே என்றாகிவிடும்.



श्रुतिभ्रष्टः श्रुतिप्रोक्तप्रायश्चित्ते भयं गतः ।
क्रमेण श्रुतिसिद्ध्यर्थं मनुष्यस्तन्त्रमाश्रयेत् ॥

என்பது போன்ற வாக்யங்களில் உள்ள தந்த்ர பதம் வேத விருத்தமான தந்த்ரங்களை குறிப்பதே. ப்ரம்ம ஸூத்ரத்தில் पत्युरसामञ्जस्यात् என்ற ஸூத்ரத்தால் கண்டிக்கப்படும் பாஞ்சராத்ர பாசுபதாதி தந்த்ரங்கள் வேத விருத்தமானவையே. ராம பூர்வதாபினீ ராம உத்தர தாபினீ, ந்ருஸிம்ம பூர்வ தாபினீ ந்ருஸிம்ம உத்தர தாபினீ முதலிய உபநிஷத்துகள் ராமன் க்ருஷ்ணன் ந்ருஸிம்மன் ருத்ரன் பரசிவன் ஸுந்தரீ முதலியவர்களின் உபாஸனையை விளக்க வந்தவையே. அவைகளை ஆதாரமாகக் கொண்ட அகஸ்த்யாதி தந்த்ரங்கள் ப்ரமாணங்களே.

ஸ்ரீ பாஸ்கரரின் இக்கருத்து அவர் காலத்தில் நிலவி வந்த வேதாந்த கருத்தையொட்டியது. உண்மையில் பாஞ்சராத்ர வைகானஸ பாசுபத மதங்களை விளக்கும் எண்ணற்ற புராணங்கள் உள்ளன. வ்யாஸரே அவற்றின் கர்த்தா. ப்ரம்ம ஸூத்ர கர்த்தாவான வ்யாஸரின் ஸூத்ரங்களில் மேற்சொன்ன மதங்களை கண்டிக்கும் ஸூத்ரங்கள் இடம் பெற ந்யாயமில்லை. அந்த ஸூத்ரங்களுக்கு பொருளாவது வேறு விதமாக இருக்கவேண்டும். உண்மையில் விஸ்தாரமானதை சுருக்கமாக எளிதில் செய்யும் படி செய்வதை தந்த்ரம் என்கிறோம். ஸமஷ்டியின் க்ஷேமத்திற்காக விஸ்தாரமான க்ரியா கலாபங்களுடன் இருக்கும் வைதிக அனுஷ்டானங்களை வ்யஷ்டியின் நலனுக்காக சுருக்கமாக விவரிப்பவை தந்த்ரங்கள். தந்த்ரம் என்றாலே சிவ சக்தி ப்ரக்ரியா என்ற பொருளும் உண்டு. அந்த அர்த்தத்திலேயே தந்த்ரத்திலிருந்து வேதங்கள் தோன்றியன என்று நாராயணீ தந்த்ரம் கூறுகிறது. வைதிகம் தாந்த்ரிகம் இரண்டையும் சரிவர உணராத உணரும் அளவிற்கு தபோபலமோ அனுஷ்டான பலமோ இல்லாத மந்த்ராதிகாரிகள் வைதிகம் என்றும் தாந்த்ரிகம் என்றும் தங்கள் கற்பனைக்கேற்ப பிரித்து கூறுகிறார்கள். தாந்த்ரிகமான அனுஷ்டானங்களை தாங்கள் செய்து கொண்டே மற்றவர்களை திசை திருப்ப தாந்த்ரிக நிந்தை செய்யும் கயவர்களும் உண்டு. வேதம் சாஸ்த்ரம் தந்த்ராகமங்கள் இவற்றில் ஈடு இணையற்ற பாண்டித்யத்தைப் பெற்று அனுஷ்டான சீலராக திவ்ய பூமிகையில் திகழ்ந்த ஸ்ரீ தேவிநாத குருதேவரின் கருத்துப்படி எல்லாவற்றிற்கும் மூலப்பிரமாணம் வேதங்களே. தந்த்ராகமங்கள் வேதங்களில் சொன்ன கருத்துக்களை தனி வ்யக்தியின் பூரணவிகாஸத்தை மனதிற் கொண்டு சுருக்கமாக விளக்க வந்தவைகளே.

Now let us correlate between the Yoga terminology physiological locations. Trikona, Yoni or Kanda of Yo literature corresponds to the triangular bone called sacrum (with the Coccyx) Sushumna which goes from the middle Kanda to the head corresponds to the spinal cord. To be mo precise Sushumna can said to correspond with Dura Mate spinal cord's outer most covering which is continuous fro head to the middle of the sacrum. Inside this the Vajra Na is akin to Arachnoid. Pia mater corresponds of Chitri which is described and experienced as very subtle like spiders thread Inside Chitrini Brahmanadi is said to ru So Brahmanadi can be equated with the spinal Cord whic provides access to the region of nectar. Sushumna Vadan can be identified with the terminal point of central canal, little above the sacrum. Or with the sub-Arachnoid spac that lies upto the middle of sacrum. Both these cavities are filled with the cerebro spinal fluid secreted in the ventricle of the brain.

Kundalini is described in structure as fine as the fibre of lotus stalk, situated above Swayumbulinga, in the Trikona with its mouth closing the way to Brahman (Brahma Dwara). Here there is a close resemblance to the filum terminale, in the middle of the sacrum and surrounded by Arachnoid and Dura Mater and extending further as filum terminale externum. Thus an attempt is made to show the plausibility of Kundalini being identified with the slender end portion of the filum terminale. This can very well form a hypothesis for both Yogis and scientists to ponder further and make further research. But one may note that mere empirical solutions are seldom found to equate the potencies of intrinsic and all-absorbing experimental revelations obtained by an aspirant under the guidance of an adept in Kundalini Yoga.

In the next series an attempt will be made to focus on Kundalini through the science of Nadis.

*(To be continued)*

## ॥ श्रीपरशुरामकल्पसूत्रविवरणम् ॥

## பரசுராம கல்பஸூத்ர விவரணம்

(ஸ்ரீ யக்ஞேச பட்டாரகன்)

### फलं त्यक्त्वा कर्मकरणम्

22. பலம் த்யக்த்வா கர்ம கரணம்,

பலம் = பலனை த்யக்த்வா = விடுத்து கர்ம = கர்மாவை கரணம் = செய்ய வேண்டும். ஸ்ரீ வித்யோ பாஸகன் காம்யமான பலனைக் கருதி பரதேவதையை வழிபடுவது கூடாது. மோக்ஷத்தையடைந்து முக்தனான நிலையில் ஸ்ருஷ்டியின் பலனான ஆனந்த நிலையில் விளங்குவதே அவனுக்கு இலக்ஷ்யமானதால் காம்யமான கர்மாக்களை செய்வது அவன் முக்தனாவதற்கு பிரதிபந்தகமாகக் கூடுமாதலால் அதை தவிர்க்க வேண்டும். அது மாத்திரமல்ல. அவன் வழிபடும் பரதேவதை அவனுடைய தேவைகளையெல்லாம் பூர்த்தி செய்துவிடுவதால் இவன் தனியாக ஒரு காம்ய கர்மா செய்யத் தேவையில்லை. ஆத்ம ஸாக்ஷாத்காரம் செய்வதற்காக ஆத்ம வித்யையாம் ஸ்ரீ வித்யையை உபாஸிப்பவன் காம்யமான கர்மாவை செய்து அனாத்மாவான மற்றவைகளுடன் பந்தத்தை ஏற்படுத்திக் கொண்டு மேன்மேலும் பந்தனாக ஆவது முறையல்ல. எல்லாம் பரதேவதையின் ப்ரீதிக்கே தன் ஆத்ம ஸ்வரூபமும் அவளே. ஆகையால் அவளுடைய ஸங்கல்பப்படி எது நடக்கிறதோ அதை அவள் ப்ரீதிக்காக அப்படியே ஏற்றுக்கொண்டு உபாஸனை செய்பவனுக்கு தனியாக ஒரு பலன் தேவை இல்லை. ஸ்ரீ வித்யோபாஸனைக்கு ஒரு பலன் கிடையாது. உபாஸிப்பதே பலன்தான். உபாஸனை செய்யும் பொழுதேதான் ஆனந்த நிலையையுணர்வதே முக்கியம்.

இந்த்ரிய சாபல்யத்தைப்பற்றி கீழ் கூறினோம். பலனை அடைய முயல்வது இந்த்ரிய சாபல்யத்தாலேயே. உபாஸனையின் ப்ரதான அங்கமான பஞ்சத்ரவ்ய த்யாகம் பலனைக் கருதியதல்ல. இந்த்ரிய சாபல்யத்தால் பஞ்ச மகார ஸ்வீகாரத்திற்கும் இந்த்ரிய சாபல்ய மற்ற ஸ்வீகாரத்திற்கும் உள்ள வித்யாஸம் சாஸ்த்ரிய நோக்கு கொண்டு தடஸ்தனாக அந்தராத்மாவின் உதவி கொண்டு நோக்குபவனுக்கே விளங்கும். ப்ரதம த்விதீய த்ரிதியர்களை நினைத்தவுடனே ஒரு சாஞ்சல்யம் ஏற்பட்டால்

சாஸ்திரீய நோக்கு இல்லையென்பது தெளிவு. இது போன்றே பஞ்சம விஷயத்திலும், ஸாதகனோ ஸாதகியோ தனக்கு வேண்டியவரின் பிரிவில் ஒருவித தவிப்பை எதிர்நோக்கின், அவருடைய வரவை எதிர்நோக்கி ஏக்கத்துடன் இருந்தால் எல்லாம் சூன்யமானது போல ஒரு உணர்வைப் பெற்றால் தூக்கம் பசி தாகம் இவற்றை மறந்து நடைபிணம் போல் இருந்தால் எதிலும் உதாஸமற்று உலகமே இடிந்து விழுந்தாலும் கவலைப்படாமல் இருந்தால் கவனிக்க வேண்டிய விஷயங்களை கவனிக்க வேண்டிய காரியங்களை மறந்து இருந்தால் அவர்கள் அனுஷ்டானத்தில சாஸ்திரீய நோக்கு சிறிதும் இல்லை. அவர்கள் இந்திரிய சாபல்யத்தால் உந்தப்பட்டு அதை த்ருப்தி படுத்த படும் துயரமே அது என்று கொள்ள வேண்டும். ஒரு ஸபாடி நித்ய அக்னி ஹோத்ரம் செய்பவர் ப்ரதம த்விதீயாதிகளில் கேவலம் சாஸ்திரிய நோக்குடன் விளங்குவார். ஆனால் மற்றவரோ இந்திரிய சாபல்யத்தால் ப்ரவர்த்திக்கின்றனர். இது போலவே பஞ்சம விஷயத்திலும். த்ரவ்ய ஸ்வீகார ஸமயத்தில் ஏற்படும் ஆனந்த ஸ்பூர்த்தியை பரதேவதையின் ஸ்வரூபமாக உணர்ந்து அதை அவளுக்கே அர்ப்பணிப்பது யாகம். அதை அனுஷ்டான ஸமயத்தில் ஸ்வயம் நுகர்வது அதப்பதனத்திற்கு வழி கோலும். தேன்கூடு அழித்தவன் புறங்கையை சுவைப்பது போல் என்ற உதாரணம் இங்கு பொருந்தாது. தன்னையே ஹோமம் செய்யப் பழகிக் கொண்டிருப்பவன் அனுஷ்டான ஸமயத்தில் விஷயங்களை நுகர்ந்தால் அது அவனை அவனது அஹங்காரத்தை அவனது ஜீவ ஸ்வபாவத்தை கொழுக்க வைக்க வழிகோலும். ஆகையால் ஸ்ரீ வித்யோபாஸகன் எந்த நிலையிலும் தன்னை தன் ஜீவஸ்வபாவத்தை கொழுக்க வைக்க முயலுவது கூடாது. பரதேவதையின் ஸங்கல்பப்படி எல்லாம் நடக்கிறது. அப்படியே நடக்கட்டும் அதற்கு என்னை அனுதினமாக நடத்திச் செல்வதிலேயே என் ஆத்மஹிதம் உள்ளது என்ற திருட நம்பிக்கை உறுதி ச்ரத்தை இவை தேவை.

ஸ்ரீ வித்யோபாஸனை நிர்விக்னமாக நடக்க முதலில் விக்ன நிவர்த்திக்கு மஹாகணபதி உபாஸ்தி விதிக்கப்பட்டுள்ளது. அதில் சதுராவ்ருத்தி தர்பணம் என்று கணபதிக்கு செய்யும் தர்பணத்திற்கு ஸாதாரணமாக நாம் கோரும் எல்லா லௌகிக யோக க்ஷேமங்களும் பலனாக கூறப்பட்டுள்ளன. அந்த மஹாகணபதி உபாஸனையினாலேயே எல்லாம் கைக்கூடும் பொழுது காம்யமாக ஒரு கர்மா செய்ய தேவையே இல்லை. பார்கவரும் மற்ற எந்த உபாஸ்தியிலும் பலச்ருதி கூறுதவர் சதுராவ்ருத்தி தர்பணத்தால் எல்லா பலன்களும கிடைக்கும் என்று





பலச்ருதி கூறுகிறார். இதிலிருந்து நாம் முக்கியமாகக் கொள்ள வேண்டியது ஸ்ரீ வித்யோபாஸனையை நிஷ்காம்யமாக செய்ய வேண்டும். உபாஸிப்பதே உபாஸனையின் பலன் என்று. கீதையில் பலவிதமாக நிஷ்காம்ய கர்மாவின் சிறப்பைப் பற்றி விளக்கப்பட்டுள்ளது. கர்மா செய்யும் பொழுதே அதில் தான் கர்மா செய்யாத நிலையில் இருப்பதையும் கர்மா செய்யாத நிலையில் தான் பல கர்மாக்களை செய்துகொண்டே (மானஸிகமாக) இருப்பதையும் உணர வேண்டும். அப்பொழுது தான் உபாஸனையே பலன் அது எதற்காகவும் இல்லையென்று விளங்கும் (தொடரும்)

# நித்யாஷோடசிகார்ணவ விவரணம்

## 4

### ஸ்ரீ யக்ஞேச பட்டாரகன்

ஸௌந்தரி எனும் த்ரிபுரஸௌந்தரியின் உபாஸனை பஹிர்யாகம் அந்தர் யாகம் என்று இருவிதம். பஹிர் யாகம் வெளிப்படையாக செய்யப்படும் க்ரியா கலாபங்கள். அந்தர் யாகம் என்பது த்யானப்ரதானமானது. அந்தர்யாகமும் ஸகல, ஸகல நிஷ்கல நிஷ்கல என்று மூன்று விதம். ஆக பஹிர்யாகம், ஸகலமான அந்தர்யாகம் ஸகல நிஷ்கலமான அந்தர்யாகம் நிஷ்கலமான அந்தர்யாகம் என நான்கு பூமிகைகள். முன் பூமிகையில் நன்கு தேர்ந்தவனுக்கே அடுத்த பூமிகையில் ப்ரவேசம் செய்ய தகுதி உண்டு. பஹிர் யாகத்தை என்பது கேவலம் யாமளம் மிச்ரம் சக்ரயுக் வீரஸங்கரம் என்று ஐந்து விதமாக சிலர் பிரிக்கின்றனர். தந்த்ரங்களில அபிகமனம் முதலிய ஐந்து பேதங்களும் தௌர்போதியம் முதலிய ஐந்து பேதங்களும் விவரிக்கப்பட்டிருப்பினும் பஹிர் யாகம் என்பது ஒரு பூமிகையே. தேசம் காலம் சக்தி முதலிய பேதங்களால் பலதரப்படினும் சித்த சுத்தி காரணமாக பலதரப்படவில்லை. பூமிகையென்பது சித்த சுத்தியை அடிப்படையாகக் கொண்டு பிரிக்கப்படுகிறது.

ஸௌந்தரீ தந்த்ரங்களில் குலார்ணவம் க்ஞானார்ணவம் ஸ்வச்சந்த தந்த்ரம் பரானந்த தந்த்ரம் பைரவி தந்த்ரம்

கிறுள். ஹரதேத்ர ஜன்மா என்று கூறவில்லை. भवस्य पत्नी பவனின் மனைவி என்ற பொருளில் भवानी என்ற சொல் வந்துள்ளது. உலக ரூபமாக பரிணமிக்கும் பரதேவதையே भवानी எனப்படுகிருள். உலகமாக பரிணமிப்பவளே குண்டலினியாக இருந்து கொண்டு தேஹமாக பரிணமித்திருக்கிருள். ஆகையால் பவானி அகண்டத்தில் பராசக்தியாகவும் வ்யஷ்டியில் குண்டலினியாகவும் விளங்குகிருள். பவனுடைய மனைவி என்று மாத்திரமின்றி தானே ஸ்ருஷ்டி முதலிய தொழிலை நடத்துகிறவள் என்பதையும் குறிக்கிறது भवानी என்ற சொல்.

## भावनागम्या ११३

பாவனுகம்யா 113

பாவனை என்ருல் சாதாரணமாக ஒன்றை மனதில் கல்பனை செய்து அதையே நினைத்து வருவதை குறிக்கிருேம். உண்மையில் பாவனு என்பது அனுபவ ரூபம். भू என்ற வினைக்கு ஆகுதல் என்று பொருள். கல்பனை மாத்திரமின்றி அதுவாகவே ஆகுவதே பாவனை. பரதேவதையை த்யானித்து அவளாகவே ஆகுதலே பாவனை. பாவனைக்கு விஷயமானவள். அவளாகவே ஆனபிறகு தான் அவளுடைய வாஸ்தவ ஸ்வரூபத்தையுணர முடியும். ஆகையாலேயே அவள் பாவனுகம்யா எனப்படுகிருள்.

## भवारण्यकुठारिका ११४

பவாரண்ய குடாரிகா 114

भवतीति भव என்று ஈச்வரனைக் கூறினேம். அது போல் இந்த விச்வமும் பவ என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. பவ என்ருல் ஸம்ஸாரம். பவாரண்யம் என்ருல் பவக்காடு. ஸம்ஸார காடு. குடாரிகா என்ருல் கோடரி. கோடரி ஒன்றை அழிக்க உபயோகிக்கும் கருவி. ஸம்ஸாரக் காட்டையழித்து மோக்ஷத்தை கொடுப்பவள் என்று சாதாரணமாகப் பொருள் கொள்ளப்படுகிறது. ஸ்ருஷ்டி துக்கமயம். ஆகையால் பவாரண்யம் என்ற ஸம்ஸாரக் காடு துக்கமயம். துக்கமயமான ஸம்ஸாரக் காட்டையழித்து ஸுகத்தை கொடுப்பவள் என்று சிலர் பொருள் கூறுவர். ப்ரம்மம் தபஸ் செய்து உலகை படைத்தது. தபஸ்ஸிற்கு பலமான இந்த உலகம் துக்கமயமாகவோ அக்ஞானரூபமாகவோ இருக்க முடியாது என்ற தந்த்ர ஸித்தாந்தப்படி பவாரண்யம் என்று ப்ரம்மவனம் என்பது போல் பரந்த இந்த விச்வத்தையே குறிக்கிறது. பவாரண்ய என்ற சொல்லால் பரதேவதையின் ஸ்ருஷ்டி சக்தி விளக்கப்பட்டால் குடாரிகா என்ற சொல்லால் அவளுடைய ஸம்ஹார



சக்தியுணர்த்தப்படுகிறது. அவளே ஸ்ருஷ்டி சக்தியாகவிருந்து உலகைப் படைத்து ஸம்ஹார சக்தியாக இருந்து கொண்டு இதை ஸம்ஹாரம் செய்து கொண்டே இருக்கிருள். ஸ்ருஷ்டியும் ஸம்ஹாரமும் அனவரதமும் நடந்து கொண்டிருக்கும் செயல்கள். பவ என்ற வ்ருக்ஷமாகவும் பவ என்ற அரண்யமாகவும் அந்த பவ வ்ருக்ஷத்தை பவக்காட்டை அழிக்கும் சக்தியாகவும் பரதேவதையே விளங்குகிருள் என்று பொருள். மேலும் பல வ்ருக்ஷங்கள் செடி கொடிகள் கொண்டது அரண்யம். பாவனையால் அனுபவரூபமாக அவளாகவே ஒருவன் ஆகும் பொழுது நானுவாக பலதாகக் காணப்படும் விச்வம் தன் ஸ்வரூபமாகவே காட்சியளிக்கும். நானுவான பலவான காடு அழிந்து ஸ்வரூபமாகவே காட்சியளிக்கும். அந்த தனக்கு அப்பால் தனியாக பலவாகவுள்ள அனுபவத்தை போக்கி எல்லாம் தானுகவேயிருக்கும் நிலையை கொடுப்பவள் என்று பொருள். அதுவே மோக்ஷம். அதை கொடுப்பவள் என்று பொருள்.

(தொடரும்)

# ॥ श्रीपरशुरामकल्पसूत्रविवरणम् ॥

# பரசுராம கல்பஸூத்ர விவரணம்

(ஸ்ரீ யக்ஞேசபட்டாரகன்)

## २३. अनित्यकर्मलोप:

அநித்யகர்மலோப: 23

நித்தியம் செய்ய வேண்டிய ஸ்நானம் சந்தி பூஜா முதலிய கர்மாக்கள் நித்திய கர்மாக்கள். நித்திய கர்மாக்கள் செய்யப்படாமல் இருந்தால் நித்ய கர்ம லோபம். நித்திய கர்ம லோபம் இல்லாமல் இருப்பவன் அநித்ய கர்ம லோபன். உபாஸகன் எந்த காரணம் கொண்டும் நித்ய கர்மாக்களைவிடக்கூடாது. நித்யகர்மா செய்யவனுக இருக்க வேண்டும் என்று கூறுவதற்கு பதில் நித்யகர்மலோபம் இல்லாதவனுக இருக்க வேண்டும் என்று கூறுவது கர்மாவைவிட்டதால் ஏற்படும் யக்ஞ குறைவுபாடு தவிர ப்ரத்யவாயமும் நரகமும் ஸம்பவிக்கும் என்று கூருமல் கூறப்படுகிறது. நித்ய கர்மாக்களில் பூஜையும் ஒன்று. அதற்கு பஞ்சமகாரங்களான த்ரவ்யங்கள் தேவை. த்ரவ்யங்கள் கிடைக்கக் கூடாத ஸந்தர்ப்பங்கள் நேரலாம். அவ்வித

ஸமயங்களிலும் நித்யகர்மா செய்தே ஆக வேண்டும் என்கிருர் அடுத்த ஸூத்ரத்தால்.

## २४. मपञ्चकाभावेपि नित्यकर्मप्रत्यवमृष्टिः

மபஞ்சகாலாபேபி நித்யக்ரம ப்ரத்யவம்ருஷ்டி: 24

மபஞ்சகங்கள் முக்கிய ருபத்தில் கிடைக்காவிடிலும் நித்யக்ரமத்தின் ப்ரத்யவம்ருஷ்டி: = அனுஷ்டானம் செய்தே ஆக வேண்டும் என்று பொருள். வ்ரீஹி என்ருல் நெல். அதை சேகரித்து அரிசியை மாவாக்கி புரோடாசம் என்ற ஹோமத்ரவ்யத்தை தயாரித்து தர்சபூர்ணமாஸ இஷ்டி செய்ய வேண்டும் என்று விதி. நெல் கிடைக்காவிடில் நீவாரம் என்ற தான்யத்தை மாவாக்கி அதைக்கொண்டு புரோடாசம் செய்து கர்மாவை செய்ய வேண்டும். நித்திய நைமித்திக கர்மாக்களை ப்ரதிநிதியைக் கொண்டாவது செய்ய வேண்டும் என்ற மேற்கண்ட கருத்துப்படி பஞ்சகம் கிடைக்காவிடிலும் ப்ரதிநிதிகளைக் கொண்டு நித்யநைமித்திக கர்மாக்களை செய்ய வேண்டும் என்று பொதுவாக விதி வரும் பொழுது இந்த ஸூத்ரத்தால் ப்ரதிநிதிகளைக் கொண்டு நித்ய கர்மாவைத்தான் அனுஷ்டானம் செய்யலாம். நைமித்திக கர்மாக்களை மபஞ்சகங்களைக் கொண்டுதான் அனுஷ்டானம் செய்ய வேண்டும் என்று நிர்தாரிக்கப்படுகிறது. ப்ரதிதினம் செய்யப்படும் பூஜை முதலியது நித்ய கர்மா. பௌர்ணமி அமாவாஸ்யை இரண்டு அஷ்டமிக்கள் சதுர்தசி மாதப்பிறப்பு முதலியன நைமித்திக கர்மாக்கள். நைமித்திக கர்மாக்களில் ப்ரதிநிதியைக் கொண்டு செய்தல் சாஸ்த்ரீயமாகாது. ஸ்ரீ பாஸ்கரர் உத்தர சதுச்சதியின் 202வது ச்லோகமான "स्वपूजा विशेषेण योगिनीनां समाचरेत्" என்பதின் கீழ் தன் வ்யாக்யானமான ஸேது பந்தத்தில் நித்ய பூஜையைவிட அதிகமாக யோகினிகள் வீரர்கள் நைவேத்யாதிகள் இவற்றுடன் பூஜை செய்ய வேண்டும் என்று எழுதி அது த்ருப்தியளிக்காததால் "विशेषस्यैव" என்று வ்யாக்யானம் செய்கிருர். அதனுல் நித்ய பூஜையில் விசேஷ த்ரவ்யங்கள் கிடைக்காவிடிலும் ப்ரதிநிதிகளைக் கொண்டு அனுஷ்டானம் செய்ய வேண்டும் நைமித்திக பூஜையில் விசேஷ த்ரவ்யங்களைக் கொண்டே செய்ய வேண்டும்.

த்ரவ்ய உபயோகம் தேசம் காலம் வயது முதலியவைகளை மனதிற் கொண்டு செய்ய வேண்டும் என்று முன்பு கூறியுள்ளோம். மபஞ்சகங்களில் பூர்வமானது ப்ரதிநிதியானுல் உத்தரமானது முக்கியமானதாக இருக்கக்கூடாது. பூர்வம் முக்கியமானுல் உத்தரமானது ப்ரதிநிதியாக இருக்கலாம். ஆகையால் மபஞ்சகங்கள் எல்லாம் முக்கியமானதாக இல்லாவிடினும் ப்ரதம த்ரவ்யங்கள்



முக்கியமானவைகளாக இருப்பது அவச்யம். அது கொண்டே ப்ரதமத்திற்கு விசேஷ த்ரவ்யம் என்றே ஸங்கேதம். சாஸ்த்ரீய அனுஷ்டானத்திற்கு நைமித்திக கால யாக அனுஷ்டானங்களுக்கு முக்கியமான ப்ரதமம் இன்றியமையாததாகுகிறது.

## २५. निर्भयता सर्वत्र

நிர்பயதாஸர்வத்ர 25

எல்லா இடங்களிலும் பயமற்று இருக்க வேண்டும். இது சாதாரண பொருள். சாஸ்த்ர அனுஷ்டானத்தையும் உபாஸகனின் தர்மத்தையும் கூறவந்த ஸூத்ரத்தில் குறிக்கப்படும் பயம் சாஸ்த்ர அனுஷ்டானத்தில் ஏற்படும் பயமே. வேதம் வகுத்த வழியில் செல்பவனே அக்னிஹோத்ரி. தந்த்ர ஆகம வழியில் அனுஷ்டானம் செய்யும் பண்பு படைத்தவனே உபாஸகன். தன்னை அக்னிஹோத்ரி வாஜபேயி ஸோமயாஜி என்றெல்லாம் கூறிக்கொண்டு ஸமயத்திற்கு தகுந்தால் போல் ப்ரதிநிதிகளைக் கொண்டு பிஷ்டபசுவைக்கொண்டு ஸோமயாகம் செய்யலாம் என்ரோ பாலைக்கொண்டு ஸௌத்ராமணி செய்யலாம் என்ரோ பயத்திருல் கூறுபவன் பெயரளவிற்குத்தான் அக்னிஹோத்ரி. அதுபோல் பயத்திருல் ப்ரதிநிதிகளைக் கொண்டு நைமித்திக யாக அனுஷ்டானங்களும் செய்ய வேண்டும் என்று கூறும் உபாஸகன் தான் செய்யும் வழிபாட்டு முறைக்கு தந்த்ர ஆகம அனுஷ்டான வர்ணம் பூசுகிறவன். அபிராமிபட்டர் கூறுவது போல் வேதம் தந்த்ரம் ஆகமங்கள் வகுத்த வழியே செல்ல நமக்கு நெஞ்சில் உறுதி வேண்டும். சாஸ்த்ரங்களில் சில த்ரவ்ய உபயோக விஷயங்களில் கூறப்பட்டுள்ள மகா பாதகங்கள் ராகிகளை (த்ரவ்யத்தை மோகத்தால் ஸ்வீகரிப்பவன்) மனதிற் கொண்டு எழுந்தவை. உபாஸகன் ராகியல்ல. சாஸ்த்ர புத்தியால் பரதேவதையின் ப்ரீதிக்காக பரதேவதா ருபமாகவே த்ரவ்யங்களை நோக்கி ஹோமம் செய்பவன். ஆகையால் சாஸ்த்ரானுஷ்டான விஷயத்தில் நிர்பயமாக அனுஷ்டானம் செய்ய வேண்டும்.

(தொடரும்)



and five subsidiary vayus (Naga, kurma, Krakara Devadatta, Dhananjaya) are endowed with the capacity of 'rigor mortis'.

Refer to another Sruti - प्रवश्शुक्राय भानये परस्वे मति भाम्ने शुद्ग (Krishna Yajurveda) Sukravahini Nadis are the triune products of creation by Sakthi-Siva ambrosia from the above triangular fountains of perenium - mammal or pectoral region or areolar glands - bregma cum occipital protuberance to pitutory glands.

*(To be continued)*



## பரசுராம கல்பசூத்ர விவரணம்

### (ஸ்ரீ யக்ஞேச பட்டாரகன்)

२६. सर्वं वेद्यं हव्यं इन्द्रियाणि स्रुचः शक्तयो ज्वालाः स्वात्मा शिवः पावकः स्वयमेव होता ॥

"ஸர்வம் வேத்யம் ஹவ்யம் இந்த்ரியாணி ஸ்ருச: சக்தயோ ஜ்வாலா: ஸ்வாத்மா சிவ: பாவக: ஸ்வய மேவ ஹோதா."

सर्वं = அந்தக்கரண வ்ருத்தியினுல் அறியப்படும் ஸர்வமு எல்லாம் हव्यं = ஹவிஸ் इन्द्रियाणि = இந்த்ரியங்கள் स्रुचः ஹோமம் செய்யும் கரண்டி शक्तयो = சக்திகள் ज्वालाः = ஜ்வாலைகள். स्वात्मा = சிவஸ்வருபனுன ஆத்மா (பரமாத்மா) அக்னி, स्वयमेव = ஜீவாத்மாவானதானே होता = ஹோமம்செய்பவன், பஞ்ச பூதங்களாலானது உலகம். பஞ்சேந்த்ரியங்களும் பஞ்சபூத மயம். பஞ்சேந்த்ரியங்கள் மூலம் நாம் உலகிலுள்ள பொருள்களை எல்லாம் உணருகிறோம். ஒவ்வொரு இந்த்ரியமும் ஒவ்வொரு பூதத்தின் விசேஷ குணத்தை உணருகிறது. சப்தம் ஸ்பர்சம் ரூபம் கந்தம் இவை முறையே ரஸம் ஆகாசம் வாயு அக்னி அப்பு ப்ருத்வி இவற்றின் குணங்கள். ச்ரோத்ரம் த்வக் சக்ஷுஸ் ஜிஹ்வா க்ராணம் இவை முறையே அவற்றை க்ரஹிக்கும் இந்த்ரியங்கள். உலகிலுள்ள பாஞ்சபௌதிகமான பொருள்கள் எல்லாம் வேத்யங்கள் அறியப்படுபவை. ஆத்மா மனதுடன் மனம் இந்த்ரியங்களுடன் இந்த்ரியங்கள் அர்த்தங்கள் எனப்படும் பொருள்களுடன்



தொடர்பு கொண்டு உணர்வை ஏற்படுத்துகின்றன. உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் அந்தக்கரணத்தில் எழும் வ்ருத்தியினுல் உணரப்படுகின்றன. அது கொண்டு அந்தக்கரண வ்ருத்தி வேத்யங்கள் எல்லாமே சிதக்னி ஹோமத்தில் ஹவிஸ்ஸாக விளங்குகின்றன.

ஒரு ஹோமம் என்ருல் அதற்கு இன்றியமையாதவை ஹவிஸ், ஹவிஸ்ஸை ஆஹுதி செய்ய உபயோகிக்கப்படும் கரண்டி, ஆஹுதி அக்னியின் ஜ்வாலையில்தான் செய்ய வேண்டுமாதலால் ஜ்வாலைகள் ஜ்வாலைகளை உடைய அக்னி ஹோமம் செய்யும் யஜமானன். சிதக்னிஹோமத்தில் ஹோமம் செய்பவன் ஸ்வயம் ஸாதகன் அவனுடைய சிவஸ்வருபமான சித்ருபமான ஆத்மாவே அக்னி, ஆத்மாவில் உள்ள ஞான பல க்ரியா முதலிய சக்திகளே ஜ்வாலைகள். ஸர்வக்ஞத்வம், ஸர்வகர்த்ருத்வம் முதலிய சக்திகளே ஜ்வாலைகள். ஆஹுதி செய்ய உதவும் கரண்டி இந்த்ரியங்களே. இந்த்ரியங்கள் மூலம் க்ரஹிக்கப்பட்டு அந்தக்கரண வ்ருத்தியால் வேத்யமான ஸர்வமும் ஹவிஸ்ஸே. இந்த பாவத்துடன் செய்யப்படும் ஹோமமே சிதக்னி ஹோமம். சிதக்னி ஹோமத்தை ப்ரதானமாகக் கொண்டதே மஹாசக்தியைக் குறித்து செய்யப்படும் யஜனம். ஆரம்ப தருணயௌவனப்ரௌட முதலிய பல அவஸ்தைகளிலும் மஹாசக்தியஜனம் செய்யப்படினும் ஸித்தநிலையான உன்மனு அனவஸ்தா என்ற நிலைகளிலேயே அது முழுமையாக சிதக்னி ஹோமமாகவே அமைவது.

மஹா சக்தியஜனத்தின் பிற்பகுதியில் சாந்திஸ்தவத்தின் போது அனுஸந்திக்கப்படும் "जपो जल्पः" என்ற ச்லோகத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது போல் நமது எல்லா உணர்வுகளையும் ஸபர்யையாக ஆக்கும்நிலை ஸஹஜஸமாதி நிலை அந்த ஸித்த நிலையே. அதுவே நமது லக்ஷ்யம். இந்தஸூத்ரம் அதைவலியுறுத்துகிறது.

(தொடரும்)

46

விஸ்வாஸ்ஸொராவகத்ரீ: ஸுவிமல திஷணும் ப்ராணிநாபாஸ யந்தீ।

கம்பீரம் வஜ்ரவீணும் கிஸலயம் ருதுனுபாணிநு வாத யந்தீ।

வித்யுத்ருபா ஸரஸ்வத்ய மலத மருசாம் வாஹினீ ந:புநாது।

விளக்கம்: ''அப்பிராகிருதமான பேரொளியால் வெண்ணமான புன்னகையைப் போன்று பிரகாசிக்கும் திவ்யமான ஜலத்தை தானம் செய்பவளும், பிராணிகளின் புத்தி சக்தியை தூய்மையாக்கி ஸமஸ்தமான வித்தைகளின் சாரத்தை உணர்வதற்கு வேண்டிய ஞானத்தைத் தூண்டுபவளும், ஒவ்வொரு ஜந்துவின் உள்ளும் இருக்கும் வஜ்ரவீணு — கம்பீரமான வஜ்ஜிர தண்டமென வழங்கும் ஸுஷும்ந நாடியாகிய வீணையில் உள்ள அறிவு என்ற மின்னலை ஒத்த ஒளிவடிவான தந்திகளை துளிர்களைப் போன்ற தனது மிருதுவான கைவிரல்களால் மீட்டுபவளுமான மின்னற் கொடி போன்ற திவ்யப்பிரகாசத்தை யுடைய ஸரஸ்வதி தேவி மிகவும் உன்னதமான, பிரகாசம் மிக்க வேதருக்குகளை வெள்ளப் பெருக்கென நமக்கு வழங்கி நம்மைப் புனித மாக்கட்டும்.''

(தொடரும்)

ॐ

# श्री परशुराम कल्पसूत्र विवरणम्

# பரசு ராம கல்ப ஸூத்ர விவரணம்

ஸ்ரீ யக்ஞேச பட்டாரகன்

## निर्विषय चिद्विमृष्टि: फलम् ।

நிர்விஷய சித்விம்ருஷ்டி: பலம் (27)

சாதாரணமாக ஒரு கர்மாவை நாம் செய்ய முடியாத பொழுது புத்ர பௌத்ராதிகளைக் கொண்டாவது செய்து வைக்கிறோம்; ஆனால் கீழ் ஸூத்திரத்தில் சொல்லியபடி சிதக்னி ஹோம பாவனை செய்வது தானே பலனையடைய. அதை வேறொருவரைக் கொண்டு செய்து கொள்ள இயலாது. அப்படிச் செய்தாலும்



அதன் பலன் நமக்கு கிடைக்காது என்றும் ஸூசிக்கப்பட்டுள்ளது. அந்த பலன் என்ன என்பது இந்த ஸூத்ரத்தால் விளக்கப்படுகிறது. விஷயம் என்பது சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் என்று ஐந்து இந்த்ரியங்களாலும் உணரப்படுவது. நிர் விஷயம் என்றால் இந்த்ரியங்களால் அறியப்படும் விஷயங்கள் தனியாக விளங்காத நிலை. சாதாரணமாக நமது அறிவு சப்தாதி விஷயங்களுடனேயே விளங்குகிறது. இந்த விஷயங்களோ விஷயங்களைப் பற்றிய அந்தக் கரண வ்ருத்திகளோ இல்லாமல் சித் மாத்திரம் உணர்வுக்கு வருமானால் அதுவே கீழ் ஸூத்திரத்தில் சொன்ன சிதக்னி ஹோம பாவனைக்கு பலன். நிர்விகல்பமான சித்ஸ்புரணத்தை உணர்வதே பலன்.

## आत्मलाभान्नपरंविद्यते ।

ஆத்மலாபான் நபரம் வித்யதே. (28)

आत्मलाभात् = ஆத்மாவை அடைதலை விட ஆத்மாவை உணர்தலை விட परं = சிறந்த फलं பலன் न विद्यते = கிடையாது. स्वविमर्श: पुरुषार्थ: தன்னை தான் உணர்வதே புருஷார்த்தம் என்று முன்பு சொல்லப்பட்டது. சதுர்வித புருஷார்த்தத்தில் தன்னை தான் உணர்வது மோக்ஷம் என்ற நான்காவது புருஷார்த்தத்தில், அது தான் சரம புருஷார்த்தம். அதற்கு மேல் ஒன்றும் அடைய வேண்டியது இல்லை. पुरुषान्नपरं किंचित् सा काष्टा सा परा स्थिति: = புருஷன் என்ற ஆத்மாவை விட மேலானது ஒன்று இல்லை. அதுவே முடிவு. அதுவே உயர்ந்தநிலை என்றும் तमेवं विद्वानमृत इह भवति அந்த ஆத்மாவை இவ்விதம் அறிந்தவன் அமரத் தன்மையை அடைகிறான் என்றும் இதையே வேதங்களும் உணர்த்துகின்றன. स्वविमर्श: पुरुषार्थ: என்று கூறினதே சிறப்பித்து இங்கு आत्मलाभान्नपरंविद्यते என்று கூறப்படுகிறது.

இது வரை பஞ்சாம்னாய ஸித்தாந்த ரூபமான ஸ்ரீ பரசுராமரின் ஸூத்ரங்கள் விளக்கப்பட்டன. கேசவ சர்மா என்பவர் இந்த ஸித்தாந்தத்தின் தாத்பர்யத்தை புரிந்து கொள்ள முடியாமல் இதை கண்டிப்பதாக யுக்தியற்ற சில வாதங்களை எழுதியுள்ளார். அவைகளை ஸ்ரீராமேச்வரஸூரி தானியற்றிய ஸித்தாந்த சிரோமணி என்ற நூலில் கண்டித்து விளக்கியிருக்கிறார். अथातो दीक्षां व्याख्यास्याम: என்று தான் தொடங்கியதை பரசுராமர் முடிக்கிறார் மேல் வரும் ஸூத்ரத் தால்

सैषा शास्त्रशैली ।

ஸைஷா சாஸ்த்ரசைலீ.

இது வரை கூறியது சாஸ்த்திரத்தின் சைலீ—போக்கு (29)
சாஸ்த்ரம் என்பது பஞ்சாம்ஞாய சாஸ்த்ரம். அது முழுவதையு
எடுத்துக்கூருவிடினும் சாஸ்திரத்தின் சுருக்கம் அல்லது வ
அல்லது போக்கு எப்படி என்பது விளக்கப்பட்டது.

वेश्या इव प्रकटा वेदादि विद्याः ।
सर्वेषु दर्शनेषु गुप्तेयं विद्या ॥

வேச்யா இவ ப்ரகடா வேதாதிவித்யா ஸர்வேஷு தர்சனேஷு
குப்தேயம் வித்யா. (30)

वेदादिविद्याः = வேதம் முதலிய வித்யைகள் वेश्या इव = வேசி
கள் போல் प्रकटाः = ஸுலபமானவை. வெளிப்படையாக உள்ளவை
सर्वेषु दर्शनेषु = எல்லா தர்சனங்களிலும் इयं विद्या — இந்த வித்யை
गुप्ता = மறைந்திருக்கிறது ஸுலபமானதல்ல.

வேதம் ஸ்ம்ருதிகள் புராணங்கள் முதலியவை ஸுலபமானவை
அவைகளை பெறுவது கஷ்டமல்ல. பணத்தை செலவழித்தால் வேசி
கள் ஸுலபமாக இருப்பது போல் பொருள் செலவழித்து அவைகளை
கற்க வாய்ப்புண்டு. ஆனால் ஸ்ரீவித்யை அப்படியில்லை. இது ஆத்ம
வித்யையானதால் பொருள் செலவழித்ததால் கிட்டக்கூடியதல்ல.

ஸ்ரீ வித்யை புணர்ந்த குரு எதையும் துச்சமாகக் கருதுபவன்.
லோபத்தினுல் இதை விற்க மாட்டான். தன்வித்யை விபலமாவதை
அவன் ஒரு போதும் விரும்ப மாட்டான். காமக்ரோதாதிகள்
நிறைந்த சிஷ்யனுக்கு இதை கொடுத்து அது விணுவதுடன் தன்
வித்யையையும் அது பாழாக்கிவிடும் என்பதை அவன் உணர்வான்.
அது கொண்டே யாஸ்கரும்.

"विद्या ह वै ब्राह्मणमाजगाम गोपाय मां शेवधिष्टेऽहमस्मि ।
असूयकाया नृजवेऽयताय न मां ब्रूया [illegible] वती तथास्याम् ।"

என்று கூறுகிருர். வித்யை ஒரு முறை ஆத்மக்ஞானம் பெற்ற
அந்தணனை சரண் அடைந்து என்னை காப்பாற்று. நான் உன்
அடைக்கலம் புகுகிறேன். பொருமை பிடித்தவர்களுக்கு நேர்மை



யற்றவர்க்கு கட்டுப்பாடில்லாதவர்க்கு என்னை உபதேசிக்காமல்
இருப்பாயாகில் நான் வீர்யத்துடன் சக்தியுடன் இருப்பேன் என்ற
ஸும். இதே கருத்து.

ब्रह्मविद्याऽति संखिन्ना ब्रह्मिष्ठं ब्राह्मणं ययौ ।
गोपाय मां सदैवत्वं कुलजामिव योषितम् ।
शेवधिस्त्वक्षयस्तेहं इहलोके परत्र च ॥

........................................................

........................................................

एवमाद्या येषु दोषाः तेभ्यो वर्जयमां सदा ।
एवं हि कुर्वतो नित्यं कामधेनुरिवास्मिते ।
वन्ध्यान्यथा भविष्यामि लतेव फलवर्जिता ॥

என்று தந்த்ரங்களிலும் விளக்கப்பட்டுள்ளது. பாத்திரமறிந்து
பிச்சையிடு என்பது வித்தியா தானத்திற்குத் தான் முக்கியமாக
பொருந்தும். அபாத்திரத்தில் வித்யையை கொடுத்தால் குருவின்
வித்யைக்கே கெடுதி ஏற்படும். அப்படிப்பட்ட பாத்திரம் கிடைப்பது
துர்லபம். ஆகையால் இந்த வித்யை மிக துர்லபமானது. குப்த
மானது.

ஆனால் இக்காலத்தில் உள்ள நிலையை நினைத்தாலே பயங்கர
மாகவுள்ளது. முன்பு தகுந்த பாத்திரம் கிடைப்பதரிது என்று
வித்யை குப்தமாக இருந்தது. இப்பொழுது தகுந்த ஸ்ரீ வித்யா
குரு கிடைப்பதே அரிதிலும் அரிதாகி விட்டது. ஸ்ரீ வித்யா வியா
பாரிகள் தான் எங்கு பார்த்தாலும் காணக்கிடைக்கின்றனர்.
ராமேச்வரஸூரியே மனம் நொந்து

"इदानींतन गुरवस्तु ब्रह्मविद्यायाः वणिक् वत् विक्रेतारः"

என்கிருர். வணிக் என்ருல் வியாபாரி. विक्रेतार = விற்கிறவர்கள்.
ஸ்ரீ வித்யையை வியாபாரி போல் விற்கிறவர்களே என்கிருர். அப்
படிப்பட்ட குருக்கள் குருக்களே அல்ல. அவர்களால் சிஷ்யர்களின்
ஸந்தாபம் போகப்போவதில்லை. இருவருமே அதோகதியையடை
கிறவர்கள். ஸ்ரீ வித்யா குரு கிடைப்பது அரிது என்பதை குலார்
ணவம் அழகாக சித்தரிக்கிறது.

गुरवो वहवस्सन्ति शिष्यवित्तापहारकाः ।
दुर्लभोयं गुरुः देवि शिष्य संतापहारकः ।।

பலவித நிறைகளுக்கு பலவித மந்த்ர உபதேசங்களுககு விலை நிர்ணயம் செய்து சிஷ்யர்களின் பணத்தை அபகரிக்கும் ஸ்ரீ வித்யா குருமார்களுக்கு பஞ்சமே இல்லை. சிஷ்யனின் ஸந்தாபத்தை போக்கவல்ல குரு கிடைப்பது தான் துர்லபம் என்று. ஆகையால் இந்த வித்யை எல்லா தர்சனங்களிலும் மிக துர்லபம் குப்தமானது. உண்மையில் ஆத்ம லாபம் என்ற புருஷார்த்தத்தை விரும்புவன் மிகுந்த ப்ரயாஸைப் பட்டு தக்க ஸ்ரீ வித்யா குருவையடைந்து இதை பெற வேண்டும்.

தொடரும்.



# நித்யாஷோட சிகார்ணவ விவரணம்

(ஸ்ரீ யக்ஞேச பட்டாரகன்)

प्रणमामि महादेवीं मातृकां परमेश्वरीम् ।
कालहल्लोहलोल्लोलकलनाशमकारिणीम् ।। २ ।।

ப்ரணமாமி மஹாதேவீம் மாத்ருகாம் பரமேச்வரீம் |
கால ஹல்லோ ஹலோல்லோல கலனா சமகாரிணீம் ॥ (2)

काल = காலத்தின் हल्लोहल — வேகத்தை — उल्लोल कलना — கீழ் மேலாக்குவதையும் शम — தடுப்பதையும் कारिणी — செய்பவளான என்று கொள்ளலாம். அல்லது कालहृत् — காலத்தையழிக்கும் லோஹ அஸ்புடவாக்கின் उल्लोल — பெரிய அலையை कलना — செய்வதையும் शम தடுப்பதையும் कारिणी செய்கிற என்றும் பொருள் கொள்ளலாம். எல்லாம் காலத்தில் ஒடுங்குகிறது. அதற்கும் அதீதனாக இருக்கும் தன்மை காலாதீதனான சிவனிடமே உள்ளது. இந்த தன்மையை அவனுக்கு அளித்ததே அம்பிகையன்றோ என்று ஸௌந்தர்யலஹரியின் கீழ்க்கண்ட சுலோகம் கவனிக்கத்தக்கது.



"करालं यत् क्ष्वेडं कवलितवतः कालकलना ।
न शंभो स्तन्मूलं तव जननि ताटङ्कमहिमा ।।"

ஸமுத்ரத்தில் பேரலை உயர்ந்து வரும் போது அதிலிருந்து தப்புவது கடினம். நீஞ்சத்தெரிந்தவனுக்கும் அது கடினம். அஸ்புடமான வாக் திடீரென்று அலை போல் கிளம்பி காலத்தை அழித்து காலாதீதநிலையை கொடுத்தும் தணிந்தும் செயல்படுகிறது. मातृका — மாத்ருகாரூபிணியும் परमेश्वरी — பரமேச்வரியுமான அப்படிப்பட்ட महादेवी — மஹாவித்யையை प्रणमामि — வணங்குகிறேன். महादेवी मातृका परमेश्वरी என்ற மூன்றில் ஒன்று விசேஷ்யமாக ஆகும் போது மற்ற இரண்டு அடைமொழியாக ஆகின்றன.

यदक्षरैकमात्रेपि संसिद्धेस्पर्धते नरः ।
रविताक्ष्र्येन्दुकन्दर्प शंकरानलविष्णुभिः ।। ३ ।।

யதக்ஷரைக மாத்ரேபி ஸம்ஸித்தே ஸ்பர்ததே நர: |
ரவிதார்க்ஷ்யேந்து கந்தர்ப சங்கரானல விஷ்ணுபி: ॥ 3

यदक्षरैकमात्रेपि எந்த மாத்ருகாக்ஷரங்களின் அல்லது வித்யையின் ஒரு அக்ஷரமும் संसिद्धे — ஸித்தித்தால் नरः மனிதன் रवि — ஸூர்யன் तार्क्ष्य — கருடன் इन्दु — சந்திரன் कन्दर्प — மன்மதன் शंकर — சிவன் अनल — அக்னி विष्णु — விஷ்ணு இவர்களுடன் स्पर्धते — போட்டியிடுவானோ அப்படிப்பட்ட மாத்ருகா பீடரூபிணியான மஹா தேவியை வணங்குகிறேன்.

ஸூர்யன் கருடன் சந்திரன் மன்மதன் சிவன் அக்னி விஷ்ணு இவர்களின் ஸாமான்ய சக்தியை பெறுவதால் அவர்களுடன் போட்டியிடுகிறான் என்று கூறப்படுகிறது. 51 மாத்ருகாக்ஷரங்களில் ஒவ்வொரு அக்ஷரமும் ஒரு மந்த்ரவடிவானது. அதற்கு ரிஷிசந்தஸ் தேவதை முதலியவை மாத்ருகாவிவேகம் முதலிய நூல்களில் விளக்கப்பட்டுள்ளது. அதை புரஸ்சர்யை செய்து அந்தந்த சக்தியை ஸாதகன் பெறமுடியும். அது போல் பஞ்சதசி வித்யையின் ஒவ்வொரு அக்ஷரத்தையும் ஸாதனை செய்து வேண்டுவன பெறமுடியும் என்பதை நான்காவது விச்ராமத்தில் விளக்கப்பட்டுள்ளது. ஸூர்யனிடம் மிகுந்த தேஜஸ் இருக்கிறது. கருடனிடம் விஷ்ணுவிற்கு வாகனமாக இருத்தல் விஷத்தை போக்கும் தன்மை மிகுந்த வேகமாக போகுந்தன்மை முதலிய குணங்கள் உண்டு. சந்திரனிடம் தேவதைகளை த்ருப்தி படுத்துதல் ஒஷதிகளுக்கு உயிரூட்டுதல்